






7.09.2012 இதழ் 1

# கிழக்குத் தேர்தலில் அதிகரிக்கும் வன்முறைகள்




## தாயகத்திலிருந்து விஜே

எதிர்வரும் 08 ஆம் திகதி சனிக் கிழமை நடைபெறவுள்ள கிழக்கு மாகாண சபைத் தேர்தலுக்கான இறுதிக்கட்டப் பிரச்சாரங்களில் கட்சிகளின் முக்கிய தலைவர்கள் பலரும் ஈடுபட்டுள்ள நிலையில், பல்வேறு வன்முறைச் சம்பவங் களும், தேர்தல் மீறல்களும் இடம் பெற்று வருவதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இத் தேர்தலில் பல்வேறு கட்சிகள், சுயேட்சைக்குழுக்கள் போட்டியிடுகின்ற நிலையில், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு, ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ், ஐக்கிய மக்கள் சுதந்திர கூட்டமைப்பு, ஐக்கிய தேசியக் கட்சி என்பவற்றிற்கிடையே பலத்த போட்டி நிலவி வருகிறது.

எதிர்வரும் 05 ம் திகதி புதன் கிழமை நள்ளிரவுடன் பிரச்சாரப் பணிகள் நிறைவடைய உள்ள நிலையில் கட்சிகளின் முக்கிய தலைவர்கள் பலரும் கிழக்கில் பல்வேறு பிரதேசங்களிலும் பிரச்சாரப் பணிகளில் ஈடுபட்டு வருவதனைக் காணமுடிகிறது. த.தே.கூட்டமைப்பின்

8ம் பக்கம்...

# நிர்வாகச் சீர்கேடுகளால் பாதிப்புறும் யாழ்ப்பாணக் கல்வி

யாழ்ப்பாணம் வேம்படி மகளிர் கல்லூரியின் அதிபராக கடந்த யூலை மாதம் பதவியேற்ற அதிபரிடம் அக்கல்லூரியின் பதில் அதிபர் பொறுப்புக்களைக் கையளிக்காது தான்தோன்றித்தனமாக நடந்து கொள்வதனையும், இவ்விடயம் தொடர்பாக கல்வி அதிகாரிகளின் பொறுப்பற்ற தன்மையையும் குறித்து கவனயீர்ப்புப் போராட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட்டுள்ளது. கல்லூரியின் முன்னால் கூடிய பழைய மாணவர்கள் பெற்றோர்கள், நலன் விரும்பிகள் இக் கவனயீர்ப்புப் போராட்டத்தினை மேற்கொண்டுள்ளனர்.

கல்லூரியின் பதில் அதிபர், புதிய அதிபரிடம் பொறுப்புக்களைக் கையளிக்காது இருப்பதாகவும், இவ்விடயம் குறித்து கல்வித் திணைக்கள அதிகாரிகளுக்கு அறிவிக்கப்பட்ட போதிலும் அவர்கள் இதுவரை உரிய நடவடிக்கை எதனையும் மேற்கொள்ளாத நிலையிலும், கல்லூரியில் நிலவி வரும் நிர்வாகச் சீர்கேட்டினால் மணாவர்களின் கல்வி பாதிக்கப்படுவதனையும் கவனத்தில் கொண்டே இப்போரட்டம் நடைபெற்றதாகத் தெரிவிக்கப்படுகிறது.

6ம் பக்கம் பார்க்க...

# இந்துக் கோவில்கள் மீது அதிகரிக்கும் நெருக்குதல்கள்

அம்பாறை தாண்டியடி கிராமத்தில் நடைபெற்று வந்த முருகன் ஆலயத் திருப்பணிகளை இராணுவத்தினர் தடைசெய்துள்ளனர். கடந்த மூன்று மாதங்களாக இவ்வாலயத் திருப்பணிகள் நடைபெற்று வந்த வேளையில் அங்கு வந்த இராணுவத்தினர், பணியைத் தொடரவேண்டாம் எனவும், அங்கிருந்து பணியாளர்களை வெளியேறிவிடுமாறும் தெரிவித்ததையடுத்து அச்சமடைந்த பணியாளர்கள் ஆலயத் திருப்பணிகளை இடையில் விட்டு வெளியேறியுள்ளனர். அம்பாறை புனித பூமியாக்கப்படும் நிகழ்ச்சித் திட்டத்தினால் இவ்வாயலத் திருப்பணிகள் தடுக்கப்பட்டிருக்கலாம் என்ற அச்சம் மக்களிடம்

8ம் பக்கம் பார்க்க...

## இந்த வாரம் www.boobalam.com இல்...

- சிறுபிள்ளைகளுக்குப் புரியும் வகையில் பேசுவோம்
- தோல்வியின் ரகசியம்
- என்ன இது? குறும்படம்.
- வீடு விற்கும் போது வருமான வரி கட்ட வேண்டுமா?
- ஆபத்து நிறைந்த நனோ தொழில்நுட்பம்

# ராதிகா சிற்சபேசனின் ஆசனத்துக்கு ஆபத்தா?

## ஒன்ராறியோவில் 15 புதிய தொகுதிகள்!

## வாயூறும் தமிழ்ப் பிரமுகர்கள்!

கனடிய நாடாளுமன்றத் தொகுதிகளின் எண்ணிக்கை தற்போதைய 308இலிருந்து 2015 தேர்தலில் 338ஆக அதிகரிக்க இருக்கிறது. அதிகரிக்கும் 30 தொகுதிகளில் ஒன்ராறியோ மாகாணம் 15 ஐயும் அல்பேட்டா 6 ஐயும் பிரிட்டிஷ் கொலம்பியா 6 ஐயும் கியுபெக் 3 ஐயும் பெற்றுக் கொள்கின்றன. புதிய சனத்தொகையினதும் அரசியமைப்பிலுள்ள ஒரு சமன்பாட்டின் அடிப்படையிலும் மாகாணங்களுக்கு பின்வருமாறு தொகுதிகள் ஒதுக்கப்படும்.

| | |
|---|---|
| பிரிட்டிஷ் கொலம்பியா | 42 |
| அல்பேட்டா | 34 |
| சஸ்கச்சுவன் | 14 |
| மனிற்ரோபா | 14 |
| ஒன்ராறியோ | 121 |
| கியுபெக் | 78 |
| நியூ பிறன்ஸ்விக் | 10 |
| நோவா ஸ்கோசியா | 11 |
| பிறின்ஸ் எட்வேட் தீவு | 4 |
| நியூபவுண்லாண்ட் | 7 |
| யூகோன் | 1 |
| நோத்வெஸ்ட் பிரதேசம் | 1 |
| நுனவுட் | 1 |




புதிய தொகுதிகளின் வருகையுடன் பெரும்பாலான தொகுதிகளின் எல்லைகள் மீள நிர்ணயம் செய்யப்படவிருக்கின்றன. இதற்காக 10 மாகாணங்களுக்கும் தனித்தனி கமிசன்கள் நியமிக்கப்பட்டுள்ளன. புதிய தொகுதிகளிற் பெரும்பாலானவை புறநகர்ப்

6ம் பக்கம் பார்க்க..

## இஸ்லாத்தின் திருமறை நூலாகிய குரான் 'எரிக்கப்பட்டதின்' சூத்திரதாரி யார்?

பாகிஸ்தானில் கிறீஸ்தவ மதத்தை சேர்ந்தவர்கள் முஸ்லிம் மதத்தை சேர்ந்தவர்களினால் பலவிதமான பாதிப்புகளி ற்கு உள்ளாக்கப்பட்டு வருவது அனைவரும் அறிந்ததே.

கடந்த ஜூலை மாதம் தெய்வ நிந்தனை குற்றம் சாட்டப்பட்டு போலீஸ் நிலையத்தில் தடுத்து வைக்கப்பட்டிருந்த கிறீஸ்தவ மதத்தை சேர்ந்த பாகிஸ்தானியர் ஒருவர் அப்பகுதியைச்சேர்ந்த முஸ்லிம்களினால் போலீஸ் நிலையத்திலிருந்து வெளியே இழுத்து வரப்பட்டு அடித்து கொல்லப்பட்டு பின்னர் எரிக்கப்பட்டுள்ளார்.

அண்மையில் கிறீஸ்தவ சிறுமி ஒருவரின் பையிற்குள் எரிக்கப்பட்ட குரானின் சில பக்கங்கள் காணப்பட்டதாக தெய்வ நிந்தனை குற்றம் சாட்டப்பட்டிருந்தார் .அச்சிறுமி மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற கோரிக்கையை முன்வைத்து நூற்றுக்கணக்கான முஸ்லிம்கள் அப்பகுதி போலீஸ் நிலையத்தின் முன்னால் ஆர்ப்பாட்டம் நடத்தினர் .இதனைத்தொடர்ந்து, சிறுமியின் பாதுகாப்பையும் கவனத்திற்கொண்ட பொலிசார் இஸ்லாமாபாத்தை அண்டிய பகுதியிலிருந்து அச்சிறுமியை கைது செய்தனர்.முஸ்லிம் அயலவர்களினால் தாம்

தாக்கப்படுவோம் என்ற பீதியின் காரணமாக கிறீஸ்தவர்கள் பலர் சிறுமியின் கிராமத்திலிருந்து வெளியேறியுள்ளனர்..

அதே நேரத்தில் காலித் சிஷ்டி எனும் முஸ்லிம் தீவிரவாத மதத்தலைவர் குரானின் சில பக்கங்களை மேற்குறிப்பிட்ட கிறீஸ்தவ சிறுமி எடுத்து சென்ற எரிந்த பத்திரிகைகளும் சாம்பலும் அடங்கிய பையிற்குள் களவாக வைத்தாக அதே பள்ளிவாசலை சேர்ந்த உறுப்பினர் ஒருவர் கொடுத்த தகவலை அடுத்து காலித் சிஷ்டி, பாகிஸ்தானிய பொலிசாரினால் கடந்த சனிக்கிழமை (1-9-2012) கைது செய்யப்பட்டிருக்கிறார்.

குரானின் சில பக்கங்களை சிறுமி எடுத்து சென்ற எரிந்த பத்திரிகைகளும் சாம்பலும் அடங்கிய பையிற்குள் வைத்ததன் மூலம் கிறீஸ்தவ சிறுமியே குரானை எரித்தார் என்று சோடனை செய்து அப்பகுதி கிறிஸ்தவர்களை அங்கிருந்து விரட்டுவதே சம்பந்தப்பட்ட மதகுருவின் உள்நோக்கமாகும்.

இருபது லட்சம் கிறிஸ்தவர்களின் பதுகாப்பின்மையை கருத்திற்கொண்டு, பாகிஸ்தான் ஐக்கிய கிறிஸ்தவர்கள் நலன்புரி சங்கத்தின் தலைவர் யூனுஸ் மஸிஹ் பாட்டி கிறிஸ்தவர்களுக்கென தனி மாநில கோரிக்கையை முன்வைத்துள்ளார்.

பெரும்பான்மையினர் சிறுபான்மையினரை அடக்க முற்படும்போது இரு சமூகத்தினரும் மட்டுமல்ல, முழு நாடுமே சீரழிந்து போனதே வரலாறு கற்றுத்தந்த பாடமாகும்.

மித்திரன்

## இலங்கையில் கிரிக்கட் உலகக் கோப்பை




கிரிக்கெட் உலக கோப்பை சிறிலங்காவில் செப்டெம்பர் பதினெட்டாம் திகதி (18.09.12) அம்பாந்தோட்டையில் சிறிலங்கா எதிர் சிம்பாவே ஆட்டத்துடன் ஆரம்பமாகின்றது .

பன்னிரண்டு அணிகள் நாலு பிரிவுகளாக பிரிக்கப்பட்டு மொத்தம் இருபத்தியேழு ஆட்டங்கள் ஆடப்படும்.

பிரிவு ஏ- இங்கிலாந்து, இந்தியா, ஆப்கானிஸ்த்தான் .

பிரிவு பி- அவுஸ்திரேலியா ,மேற்கிந்திய தீவுகள், அயர்லாந்து

பிரிவு சி- சிறிலங்கா,தென்னாபிரிக்கா, சிம்பாவே

பிரிவு டி- பாகிஸ்த்தான், நியுசிலாந்து ,பங்களாதேஷ்.

இறுதி ஆட்டம் கொழும்பில் நடைபெறும்

சமகாலத்தில் பெண்களுக்கானா இருபது 20 கிரிக்கெட் போட்டிகளும் இரண்டு பிரிவுகளாக பிரிக்கப்பட்டு மொத்தம் பதினைந்து ஆட்டங்கள் எல்லாமே காலியில் நடைபெறும் .

பிரிவு ஏ- அவுஸ்திரேலியா, இந்தியா, இங்கிலாந்து, பாகிஸ்த்தான்

பிரிவு பி- நியுசிலாந்து, மேற்கிந்திய தீவுகள், சிறிலங்கா, தென்னாபிரிக்கா.

இது நாலாவது இருபது ஓவர் உலகக்கோப்பை. தென்னாபிரிக்காவில் 2007 ஆண்டு நடைபெற்ற முதலாவது உலககோப்பையை இந்தியா வென்றது நினைவிருக்கும். பின்னர் 2009 இல் இங்கிலாந்தில் நடைபெற்ற உலககோப்பையை பாகிஸ்தான் வென்றது. கடைசியாக 2010 இல் மேற்கிந்திய தீவுகளில் நடைபெற்ற இறுதி பந்தயத்தில் அவுஸ்திரேலியாவை இங்கிலாந்து தோற்கடித்து முதன் முதலாக கிரிகெட் அமைப்பு நடாத்தும் ஒரு பந்தயத்தை வென்றது.

இதுவரை நடந்த மூன்று உலக கோப்பைகளில் சிறிலங்காவை சேர்ந்த மேகல ஜெயவர்த்தனா 615 ரன்கள் எடுத்து முதலிடத்திலும் பீற்றர்சன் இங்கிலாந்து 580 இரண்டாவது இடத்திலும் உள்ளார் .பாகிஸ்தானை வீரர்களே முதல் இரண்டு இடத்திலும் அதிக விக்கெட் எடுதவர்களாக உள்ளார்கள் சயிட் ஆபிரிடி(27) உமார் கல் (26). இதில் உமார் கல் நியுசிலாந்திற்கு எதிரான ஒரு ஆட்டத்தில் ஐந்து விக்கெட்டுக்களை ஆறு ரன்கள் மட்டும் கொடுத்து வீழ்த்தினார்.

இருபது ஓவர் உலக கோப்பையில் இதுவரை மூன்று வீரர்கள் மட்டுமே சதம் அடித்துள்ளார்கள் .கிறிஸ் கெயில் (117),சுரேஷ் ரெய்னா(101) மேகல ஜெயவர்த்தனா (100). இதில் கிறிஸ் கெயிலும் சுரேஷ் ரெய்னாவும் தமது சதங்களை தென்னாபிரிக்காவிற்கு எதிராக அடித்தார்கள்.

யுவராஜ்சிங் மீண்டும் கான்சர் சிகிச்சைக்கு பின் இம்முறை களத்தில் இறங்குகின்றார். முதலாவது இருபது ஓவர் உலக கோப்பையில் யுவராஜ்சிங் இங்கிலாந்து வீரர் ஸ்டுவட் புரோட் இன் பந்து வீச்சுக்கு ஒரு ஓவரில் அவர் விளாசித் தள்ளிய ஆறு சிக்சர்களும் இன்னமும் பலர் கண்ணகளில் நிற்கின்றன

தர வரிசையில் தென்னாபிரிக்கா முதலிடத்திலும் இங்கிலாந்து ,சிறிலங்கா ,இந்தியா என்ற ஒழுங்கில் மற்றைய நாடுகளும் இருந்தாலும் அந்த நேரம் அவர்கள் விளையாடும் தரமே வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும்.

இலங்கை காசுக்கு முதல் சுற்று ஆட்டங்கள் 550 ரூபாவிற்கும் இறுதி ஆட்டம் 4950 ரூபாவிற்கும் விற்கின்றார்கள் .ஊரில இருந்திருந்தால் நாங்களும் ஒருக்கா எட்டி பார்த்திருக்கலாம் .

பரதன்

## அவுஸ்திரேலியாவிற்கு ஏன் இந்த ஓட்டம்?

சிவா ஈஸ்வரமூர்த்தி

இலங்கையில் போர் ஓய்ந்த பின்பு உடனடியாக கனடாவிற்கு பெரும் கப்பல்களில் படையெடுத்தனர் இலங்கை தமிழர். இதில் இலங்கை அரசின் பாதுகாப்பு கெடுபிடி ஏற்படலாம் என்று கப்பலில் ஏறி தப்பியவர்கள் பலர். இந்தப்பயணம் பல நாட்கள் (ஏன் மாதங்கள்) எடுக்கும் தாம் விரும்பும் கனடா, இலண்டன் போன்ற நாடுகளை சென்றடைவதற்கு. இதற்கு சாதாரண கடற் தொழிலுக்கு பயன்படும் வள்ளங்கள் போதுமானவை அல்ல. இந்த ஆழ் கடல்(சமுத்திரம்) பயணத்திற்கு கப்பல் தரத்திலுள்ள கடற் பயண வாகனங்கள் தேவை. இவற்றைப் பெறுவது கடினம். இக் கடல் பயணத்திற்கான் செலவுகள் (எரிபொருள், சாப்பாடு, மருந்துப் பொருள்..) அதிகம், மேலும் ஆசியாக் கண்டத்திருந்து ஆரம்பித்து ஆபிரிக்க, ஐரோப்பிய கண்டங்களைத் தாண்டி அமெரிக்க கண்டத்தை அடையவேண்டும். இதற்கு இந்து சமுத்திரம், அத்திலாந்திக் சமுத்திரம், பசுபிக் சமுத்திரம் என்று சமுத்திரங்களை கடக்க வேண்டும்.

ஆனால் இலங்கையிலிருந்து அவுஸ்திரேலியாவிற்கான பயணம் சில நாட்களில் முடிந்து விடும். இந்தப் பயணத்திற்கு சாதாரண கடற் தொழிலுக்கு பயன்படும் வள்ளங்கள் போதுமானவை. ஆசியாவிலிருந்து அவுஸ்திரேலியா என்று ஒரு கண்டம் விட்டு இன்னொரு கண்டம் தாண்டினால் போதும். இந்து சமுத்திரத்தில் ஆரம்பித்து இருந்து சமுத்திரத்தில் பயணத்தை முடித்துக் கொள்ளலாம். இவை எல்லாவற்றையும் விட பயணம் நாடுகளை அண்டிய சமுத்திரத்தினூடான பயணம் இது. எனவே சில பாதுகாப்பு நிலைமைகள் இங்கு உள்ளன. எனவே ஒப்பிட்டு ரீதியில் வட அமெரிக்க, ஐரொப்பிய கடல் பயணத்தை விட அவுஸ்திரேலியா பயணம் பாதுகாப்பானது. குறுகிய நாட்களில் குறைந்த செலவில் முடிந்து விடும்.

இந்த அவுஸ்திரேலிய பயணத்தில் அதிகம் கலந்து கொள்ளும் நாட்டவர் இலங்கை, ஆப்கானிஸ்தான், ஈராக் போன்ற நாடுகளைச் சேர்ந்தவர்களே ஆவர். அதுவும் மஸ்லீம் நாட்டவர் வட அமெரிக்கா விட அவுஸ்திரேலியாவை அதிகம் விரும்புகின்றனர். இரட்டைக் கோபுர வலிகள் வட அமெரிக்கர்களை முஸ்லீம்களை "கறாம்" என்ற பார்வையுடனேயே எப்போதும் பார்க்க வைக்கின்றது. இதன் அளவு அவுஸ்திரேலியவில்குறைவாக இருபது காரணமாக அமைகின்றது.

வட அமெரிக்க பயணத்திற்கு 50,000 டாலர் வரை பயண முகவருக்கு செலுத்தும் நிலமைகளே உள்ளன. ஆனால் அவுஸ்திரேலியா பயணத்திற்கு வெறும் 3,000 டாலர் வரை செலுத்தினால் போதுமானது. இலங்கை போன்ற 3ம் உலக நாடுகளில் உள்ளவர்கள் இந்த 3,000 டாலர்களைச் செலுத்தி தமது கனவுப்பயணத்தை மேற்கொள்ளவே முயலுவர்.

இவை எல்லாவற்றையும் விட அவுஸ்திரேலியாவின் எல்லைக்குள் புகுந்த ஒருவரை அவுஸ்திரேலியா தமது அகதிகள் முகாமில், வட அமெரிக்க அகதிகள் முகாங்களை விட அதிக அளவு பணக் கொடுபனவுகளுடன் கவனித்து வருகின்றது. அகதி நிலைக் கோரிக்கைகளும் குறுகிய நாட்களுக்குள் விசாரிக்கப்பட்டு (சாதகமான) தீர்ப்புக்கள் கிடைத்துவிடும். இதனால் அகதிகளாக செல்பவர்கள் தமது பொருளாதார முயற்சிகளை சீக்கிரத்தில் அங்கு ஆரம்பிக்க முடியும். இவ்விடயங்களில் கனடா, பிரித்தானியா போன்ற நாடுகள் அகதிக் கொடுப்பனவுகள், அகதிக் கோரிக்கைகளுக்கான (சாதகமான) தீர்ப்புக்கள் அகதி நிலைக் கோரிக்கையாளர்களின் பொருளாதார எதிர்பார்ப்புக்களை வேகமாக நிறைவேற்றுவதற்கு சாதகமாக இல்லை. வந்த கடனைக் கட்டி முடிக்கவே அமெரிக்க, ஐரோப்பாவில் வயதாகிவிடும்.

தற்போது அந்தந்த நாடுகளில் பாதுகாப்பு கெடுபிடிகள் யுத்த நிலமைகள் இருக்கின்றன என்பது உண்மையே. ஆனாலும் பொருளாதார காரணங்களுக்காகவே 3ம் உலக நாடுகளிலிருந்து கனடா, அமெரிக்கா. பிரித்தானியா, அவுஸ்திரேலியா, ஐரோப்பா போன்ற நாடுகளுக்கு பலரும் இடம் பெயர்கின்றனர் என்பதுவே பெரும்பாலும் உண்மை நிலமை. இந்த நாடுகளில் கிடைக்கும் காசை(டாலர், பவுண்ஸ், யூரோ) தங்கள் நாட்டுப் பணத்தில் மாற்றும் போது வரும் பெருந்தொகை இவர்களை கவர்ந்து இழுக்கின்றது என்பதே உண்மை.

அகதிகளின் இவ்நாடுகளுக்கான இடம் பெயர்வுகளை அந்தந்த நாடுகளில் உள்ள அரசியல்வாதிகள் தமது அரசியலை நடாத்துவதற்காக வியாக்கியானம் கொடுத்து பேசுவது இயல்பானதே. இதற்கு அவர்கள் காட்டும் முக்கிய காரணம் அவ் அவ் நாடுகளில் பாதுகாப்பு நிலைமைகள் மோசமாக உள்ளன. இதற்கு காரணம் ஆளும் அரசின் படைகளின் செயற்பாடுகள் என்பவையே. இதில் உண்மையும் இல்லாமல் இல்லை.

தற்போது இலங்கையை மட்டும் எடுத்துக் கொண்டால் அண்மைய நாட்களில் அவுஸ்திரேலியா பயணங்களே அதிகமாக உள்ளன. இதில் தமிழ் மக்கள் மட்டும் கலந்து கொள்ளவில்லை. மாறாக முஸ்லீமகள், சிங்களவர்கள் என் மூவின மக்களும் கலந்து கொள்கின்றனர். இலங்கையில் ஏற்பட்டு வரும் பொருளாதார சுமைகளும், வெளிநாட்டுகளில் கிடைக்கும் டாலர்களை ரூபாய் இற்கு மாற்றினால் கிடைக்கும் பெரும் தொகையும் இவர்களை வெளிநாடுகளுக்கு ஓட வைக்கின்றது.. ஒப்பீட்டு ரீதியல் இலகு, பணச் செலவு குறைந்த பயணமான அவுஸ்திரேலியாவை மக்கள் நாள் தோறும் தெரிவு செய்து முயன்ற வருகின்றனர். இலங்கை கடலை (இந்து சமுத்திரம்) அரை மணி நேரத்தில் கடந்து விட்டால் பின்பு தாங்கள் அவுஸ்திரேலியாவிற்கு போய் சேர்ந்ததற்கு சமன் என எண்ணமும், நிலைப்பாடும் இவர்களை முகவர் பக்கம் தள்ளுகின்றது.

இந்த பயணத்திற்கு இலங்கை கடற்படையிலுள்ள சிலரின் அனுசரணையும் உள்ளது என நம்பப்படுகின்றது. பிடிபடாமல் பயணம் செய்வதற்கும் காசு. பிடிபட்டால் விடுவிப்பதற்கும் காசு என்ற வகையில் கடற்படையினர் சிலர் செயற்படுவதாக அறிய முடிகின்றது. கூடவே இலங்கையில் யுத்தம் முடிந்த நிலையில் யுத்த காலத்தில் இலங்கை அரச படையிலுள்ளவர்களுக்கு யுத்தத்தின் காரணமாக கிடைத்து வந்த பணப் பட்டுவாடாக்கள் இல்லாமல் போய்விட்டது. தற்போது பணப் பட்டுவாடாவிற்கான புதிய வழிமுறையாக இதனை அவர்கள் பாவிக்கின்றார்கள் என்ற வாதத்தில் நியாயங்கள் நிறையவே உள்ளன.

இலங்கையில் தமிழரைப் பொறுத்தவரையில ஒட்டு மொத்த இலங்கை சனத் தொகையில் விகிதாசாரம் வீழ்ச்சியடைவதை இலங்கை அரசாங்கங்கள் மகிழ்ச்சியுடன் இதனை மறைமுகமாக கொடுப்பக்கள் சிரித்தபடியே கண்டும் காணாமல் வரவேற்றபடி இருப்பார்கள். நாம் மட்டும் ஓடிக் கொண்டே இருப்போம் மேற்குலக நாடுகளும் குறைந்த ஊதியத்திற்கு கூடிய வேலைக்கு ஆட்கள் தேவை என்பது இருக்கும் வரை இரு கரம் கூப்பி வரவேற்பர் எம்மை. பொருளாதாரம் சிக்கல் தங்கள் தலையை எடுக்கும் என்றால் அவர்கள் உங்கள் தலையை எடுக்க தயங்க மாட்டார்கள்.

வாழ்க மேற்குலகின் பொருளாதார மனிதாபிமானம்?

# இருளிலிருந்து ஒளிக்கு...

'அட, புதுசா ஒரு பேப்பர் வந்திருக்கு!'

'புதுசா என்னத்தை எழுதிக் கிழிக்கப் போறாங்களாம்?'

'ஊரான ஊரில இவங்க தொல்லை தாங்க முடியலைப்பா!'

பூபாளம் இதழைக் கண்டதும் உங்கள் மனதில் எழுந்திருக்கக் கூடிய எண்ணங்கள் இவை.

இவை எதுவுமே இல்லாமல் 'ஓ, மா அரிக்க உதவும்' என்று கூட ஒரு கட்டைத் தூக்கியிருக்கவும் கூடும்... பின்னால் வருபவருக்கு மிச்சம் வைக்காமல்.

முழுப் பிரதிகளும் விற்றுத் தீர்ந்து விட்டன என்று நாங்கள் பெருமிதம் கொள்ளலாம்.

இதில் யாரை நாங்கள் நோக முடியும்?

தமிழினத்தின் ஊடக நிலைமை அப்படி.

ஒரு பலசரக்குக் கடை ஆரம்பிப்பதை விட, பத்திரிகை ஆரம்பிப்பது இலகுவாகி விட்டது.

ஒரு கம்பியூட்டர், தமிழ் எழுத்து...

தமிழில் டைப் செட்டிங் செய்ய ஆள் தேவை என்று வாரா வாரம் விளம்பரம் கூடப் போடலாம்.

சட்ட ரீதியான குறைந்த பட்ச சம்பளக் கொடுப்பனவு கூட இல்லாததால், வந்தவர்கள் தலைமறைவு ஆவதால் வரும் தொல்லை இது.

விளம்பரங்களின் எண்ணிக்கையைக் கண்டு வாயூற வைக்க, கடல்புறா சைஸில் மூன்று நாலு வியாபார விபரத் தொகுப்புகள்.

ஆசிரியருக்கு தமிழில் எழுதத் தெரிய வேண்டும் என்ற அடிப்படை விதி கூட இல்லை.

சொல்வதற்கு தனியான கருத்துக் கூட அவசியம் இல்லை.

எங்களுக்குத் தெரிந்த வரையில், கனடாவில் வேறெந்த இனத்துக்குள்ளும் இப்படி ஒரு இனத்தொகையில் இத்தனை பத்திரிகைகள் வருவதில்லை. இத்தனை லட்சம் தமிழர் வாழும் தாயகத்தில் கூட, ஒரு கை விரல்களுக்குள் அடக்கக் கூடிய எண்ணிக்கையில் பத்திரிகைகள்.

ஒரே சந்தி மூலையில் தமிழ் மகன்களின் நிர்வாகத்தில் நான்கு பலசரக்குக் கடைகள் போல...

எண்ணிக்கையைக் கண்டு பெருமை கொள்வதா? தரத்தைக் கண்டு தலை குனிவதா?

கீரைக் கடைகளுக்கு கூட எதிர்க்கடை வைப்பது தமிழர் பாரம்பரியம் ஆச்சே!

விளம்பரம் கிடைக்கும் என்ற கனவில், வியாபாரப் போட்டியில் விளம்பர விலையைக் குறைத்து...

எதிரிக்கு சகுனம் பிழைக்க வேண்டும் என்பதற்காக எங்கள் மூக்கை அறுத்துக் கொள்வதில் எங்களுக்கான இன்பம் பாரம்பரியமானது.

வியாபாரப் போட்டியால் மலிந்த முழுப்பக்க விளம்பரங்கள். அதன் நடுவே அங்கும் இங்குமாய் இணையத்திலிருந்து ஈயடிச்சான் கொப்பிகள்.

பக்கம் நிறையும். எடையில் போட்டு நிறுத்து விற்றாலும், பெறுமதி அதிகம்...

அச்சிட்ட காகிதத்தின் பெறுமதி கூட இல்லாத எழுதப்பட்ட விடயங்கள்.

படிப்பதற்கு உள்ளே எதுவும் இல்லை... புதிதாக! ஏற்கனவே இணையத்தில் வந்தவற்றை மூலம் குறிப்பிடாமல், பிரதி செய்து பக்கத்தை நிரப்பலாம்.

மூலம் குறிப்பிடும் அடிப்படைப் பத்திரிகை தர்மம் கூட இங்கே கிடையாது.

மீதியை நிரப்ப... கோயில் மேளங்களும் உண்டு.

தங்க பஸ்ப லேகிய விளம்பரங்கள் போல, மித்திரனின் டாக்டர் லலிதா பதில்கள் வரைக்கும் போகலாம்.

விற்பதற்கு விடுதலை இல்லாது போனால், இருக்கவே இருக்கிறது பால் உறவு!

திரைச்சித்திராவுக்கும் பருவகாலத்திற்கும் அநாவசியமாய் காசைத் தொலைக்க வேண்டிய கட்டாயமில்லை.

பத்திராதிபர்கள் கோட், சூட்டுடன் அரசியல்வாதிகளுடன் தோள் உரசவும், பிரபலங்கள் பத்திரிகையை வாசித்தபடி காட்சி தரவும் தவிர, இந்தப் பத்திரிகைகள் எதைச் சாதித்திருக்கின்றன?

தொழில் தர்மம் என்ற கருத்து தமிழினத்திற்கு அப்பாற்பட்டது.

பத்திரிகைக்கும் தர்மங்கள் உண்டு.

பலசரக்கு வியாபாரத்திற்கும் பத்திரிகை வியாபாரத்திற்கும் வித்தியாசங்கள் நிறைய உண்டு.

போட்டிக்கு பலசரக்குக் கடை திறந்து 98 சதத்திற்கு நெத்தலிக் கருவாடு விற்கலாம்... மகத்தான ஒரு சத சேமிப்புடன்!

திறந்த சந்தைப் பொருளாதாரம்.

தக்கன பிழைக்கும்.

தோற்றவர் கடையை மூடிக் காலி பண்ணுவார்...

வங்குரோத்தானாலும் தமிழனுக்கா பிழைக்க வழி தெரியாது?

வங்குரோத்து ஆதலே பிழைப்பு ஆகி விட்ட சமூகத்தில்!

பத்திரிகையின் கதையே வேறு.

செய்திகளை உப்புப் புளி விடாமல் பகுத்தும் தொகுத்தும் தருவது அது.

கருத்துக்களை காய்தல், உவத்தல் இன்றி ஆய்வு செய்வது அது.

பத்திரிகையின் கதையே வேறு.
செய்திகளை உப்புப் புளி விடாமல் பகுத்தும் தொகுத்தும் தருவது அது. கருத்துக்களை காய்தல், உவத்தல் இன்றி ஆய்வு செய்வது அது.
ஒரு அரசனின் மதியூகி மந்திரியாக, ஒரு தலைவனின் மதியுரைஞனாக, ஏன் ஒரு அரசின் எதிர்க்கட்சியாக செயற்பட வேண்டியது தான் பத்திரிகை.
அது தான் கடமை. அது தான் தர்மம்.
தனம் எல்லாம் அந்த தர்மத்திற்கும் கடமைக்கும் பின்னானவை தான்.

ஒரு அரசனின் மதியூகி மந்திரியாக, ஒரு தலைவனின் மதியுரைஞனாக, ஏன் ஒரு அரசின் எதிர்க்கட்சியாக செயற்பட வேண்டியது தான் பத்திரிகை.

அது தான் கடமை. அது தான் தர்மம்.

தனம் எல்லாம் அந்த தர்மத்திற்கும் கடமைக்கும் பின்னானவை தான்.

ஊடகம் ஒரு வர்த்தகம் தான். அது இனத்தை விற்கும் ஈனப் பிழைப்பாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

ஊடகம் ஒரு வியாபாரம் தான். அது விபசாரமாக வேண்டிய கட்டாயம் இல்லை.

தனிமைப்பட்டு நின்ற தலைமைக்கு, உண்மை நிலையை, ஊடகங்கள் புட்டுக் காட்டாததற்கான விலையை இன்று எங்களுடைய தமிழினம் செலுத்திக் கொண்டிருக்கிறது.

நின்னடி போற்றி என்று தலை குனிந்து பலத்தைப் புகழ்ந்தவர்கள், பலவீனத்தையும் சுட்டிக் காட்டி இருந்தால், அந்தத் தலைவன் இன்று எங்கள் மத்தியில் நின்றிருக்க மாட்டானா?

சிங்கள அரசுக்கு சிம்ம சொப்பனமாக நின்ற அந்தத் தலைவனுக்கு சமாதானத்தின் நன்மையை எடுத்துக் காட்டியிருந்தால், அந்தப் பெரும் படையை வைத்து பயமுறுத்தியே சமாதான மேசையில் எத்தனையோ விடயங்களை சாதித்திருக்க முடியாதா?

விட்டால் குடுமி என்று அடம் பிடித்ததால் தான் இன்று மொட்டை அடிக்கப்பட்டிருக்கிறோம்.

பட்டுத் துகிலுக்கு ஆசைப்பட்டு கோவணத்தையும் பறி கொடுத்து நிற்கிறோம்.

இறுதி வரைக்கும் 'இறுதித் துளி இரத்தம் இருக்கும் வரையில் போராடுவோம், வெற்றி அல்லது வீரமரணம்' என்று அறை கூவியவர்கள் களத்தில் நின்று போராடியவர்களா?

இல்லை. Live to fight another day என்று இன்னொரு நாள் யுத்தத்தைத் தொடர, அதற்காக இன்று ஆயுதங்களை மௌனிக்கச் செய்ய, களத்தில் இருந்தவர்கள் தயாராகத் தான் இருந்தார்கள்.

இந்தக் கூச்சல் போட்டது எல்லாம் வெளிநாட்டில் விடுதலை வியாபாரம் செய்த ஊடகங்கள் தானே.

உள்ளே வர விட்டு அடிக்கப் போறாங்கள் என்று உசுப்பேத்தியது இவர்கள் தானே.

களம் புகுந்து எதிரிகளை புறமுதுகிட வைத்து சிதறடித்த வீர வேங்கைகளை, சிங்களத்தின் கருவறைக்குள் புகுந்து வரலாற்றுச் சாகசம் காட்டிய கரும்புலிகளை, உயிர் தமிழுக்கு, உடல் மண்ணுக்கு என்ற தற்கொடையாளர்களை, மாற்றானை மண்டியிட வைத்த மாவீரர்களை, முள்ளிவாய்க்காலில் வெறும் பலிக் கடாக்களாக்கியதில் இந்த ஊடகங்களிற்கு பங்கில்லையா?

சிங்களத்தின் வெடிகுண்டுகளில் அப்பாவி மக்களதும் போராளிகளதும் உடலங்கள் சரிந்து சிதறி தமிழ் இரத்தம் மண்ணைத் தோய்த்த போது, வைத்தியர்களைப் பேட்டி கண்டு அந்த எண்ணிக்கையைக் காட்டி பத்திரிகை யாவாரம் செய்வதில் இருந்த ஆர்வம், தளபதிகளின் மரண ஓலத்தை வானலையில் வியாபாரம் ஆக்கியதில் இருந்த ஆர்வம், அந்த யுத்தத்தை முடிவுக்கு கொண்டு வருவதில், அந்த உயிர்களைக் காப்பாற்றுவதில் இந்த ஊடகங்களுக்கு இருந்ததா?

யுத்தம் நடந்தால் தானே பிழைப்பு நடக்கும். இதனால் தான் சரக்கு இல்லாமல் இன்றைக்கு பால் உறவு வரைக்கும் போய் விட்டார்கள்.

உண்மைகள் கசக்கும். மருந்துகளும் கூடத் தான்.

கசப்பு என்பதற்காக உண்மைகளைக் கேட்க மறுப்பது, நோயைத் தீர்க்கும் மருந்தை சுவையைக் காரணம் காட்டி குடிக்க மறுப்பது போன்றது.

வாசகர்கள் வாசிக்க விரும்புவதை மட்டும் கொடுத்து குஷிப்படுத்துவதும், பொய்களைத் திரும்பத் திரும்பச் சொல்லி உசுப்பேத்துவதும் ஒரு சமூகத்தை, இனத்தை முன்னேற்றப் பாதைக்கு கொண்டு போக முடியாது. அழிவுக்குத் தான் இட்டுச் சென்றதை எங்கள் இனம் அறியும்.

எந்தப் பக்கத்தால், அடி விழும் என்று தெரியாமல், உண்மைகளை எழுதாமல், முழுப் பூசணிக்காயைச் சோற்றுக்குள் மறைக்கும் கைங்கர்யங்கள் தான் இங்கே.

வாசிப்பவர்களுக்கு உண்மை தெரிந்து விடக் கூடாது, தெரிந்தால் பிழைப்புக்கு ஆகாது என்பதால் நடக்கும் திருவிளையாடல்கள் எத்தனை?

எந்தப் பத்திரிகையாவது, எங்கள் சமூகத்திற்கான நிலைப்பாட்டை துணிந்து எடுத்த வரலாறு உண்டா? பொதுவான கருத்துக்களின் தவறை தயங்காமல் சுட்டிக் காட்டிய பத்திரிகை ஒன்று எங்கள் சமூகத்தில் உண்டா?

கும்பலோடு கோவிந்தா போடாவிட்டால், தர்ம அடி விழும் என்ற பயம்.

தவறு இந்தப் பத்திரிகைகளுடையதா? சமூகத்தினதா?

சமூகத்தில் கருத்துப் பரிமாற்றத்திற்கு பத்திரிகைகள் உதவியதாக வரலாறு உண்டா?

மதப் பிரசாரகர்கள் போல, மூளைச் சலவை செய்து போதிப்பதற்கு மட்டும் ஆள் குறைச்சலில்லை.

தமிழ்ச் சமூகத்தில் கடவுளும், விடுதலையும் வியாபாரம் ஆனது போல, செய்தியும் அதைச் சுமந்து வரும் பத்திரிகை உட்பட்ட ஊடகங்களும் வெறும் வியாபாரம் தான்.

'கூந்தல் கறுப்பு, குங்குமம் சிவப்பு' என்று கும்பலோடு கோவிந்தா கூப்பாடு போட, இன்னொரு பத்திரிகை இங்கே தேவை இல்லை. ஊரோடு ஒத்தோட எதற்கு இன்னொருத்தர்?

கூந்தலின் நிறம் இயற்கையானதா, செயற்கையானதா என்பதை ஆய்ந்தறிந்து, வாசிப்பவர்கள் ஏமாந்து விடாமல் இருக்க, இளமையின் ரகசியம் பூசிய சாயத்தின் மகிமை தான் என்பதைச் சொல்லத் தான் பத்திரிகை தேவை.

குங்குமத்தின் நிறத்திற்கு காரணம் தோலுக்கு உதவாத கலப்படம் என்பதை, குங்கும வியாபாரியின் விளம்பரத்திற்கு பங்கம் வரும் என்ற பயமில்லாமல் சொல்வதற்குத் தான் பத்திரிகை தேவை.

எவனோ எழுதியதை தன்னுடையதாக்கி பொற்காசுகளுக்காய் பிழைப்பு நடத்தும் தருமிகள் இங்கே தேவை இல்லை, 'பட்டினி கிடந்து பசியால் மெலிந்து பாழ்பட நேர்ந்தாலும்' ஏன், எரிந்து சாம்பராக நேர்ந்தாலும், நெற்றிக் கண் திறப்பினும் குற்றம் குற்றமே என்று நேர்மையோடு சொல்லத் தான் இங்கே ஆள் தேவை.

நேற்று எஞ்சி, பழுதாகிய பழைய உணவைச் சூடாக்கி, புதிது போலக் கொடுக்கும் சோத்துக்கடை வியாபாரம் இல்லை பத்திரிகை.

அச்சில் வரும் எழுத்துக்கள் உண்மையானவை என்று நம்பும் வாசகனுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யும் இன்னொரு ஊடகம் இங்கே தேவை இல்லை.

பத்திரிகைகள் வாசகனுக்கு மட்டுமே உண்மையாய் இருக்க வேண்டும்.

இங்கே இருந்து கொண்டு சிங்களத்தை தகர்ப்பதாக வாய்ச்சவடால் அடித்த பத்திரிகையாசிரியர்கள் அங்கே கடற்படையின் உதவியோடு ஊருக்குப் போகிறார்கள். தமிழனின் இரத்தம் காய்வதற்குள் இந்தக் கூத்தா என்றெல்லாம் அலறியவர்கள் யாழ்ப்பாணம் வரை போய் வந்திருக்கிறார்கள், வெள்ளை வான் கவலை இன்றி. மகிந்தவைப் பிடித்து வியாபாரம் ஆரம்பிக்கும் கனவில், கோத்தாவின் கடைக்கண் பார்வைக்காய் தவம் கிடக்கும் ஊடகவியலாளர்கள் எத்தனை ?

இந்த விபசார வேசதாரிகள் இங்கே போடும் பத்தினி வேசம் தாங்க முடியவில்லை!

வாசகனை இருளில் வைத்திருக்க வேண்டும் என்பதில் எத்தனை பேருக்குத் தான் அக்கறை? தாங்கள் பிரமுகர்களாக வலம் வர வேண்டும் என்பதைத் தவிர இவர்களுக்கு என்ன விருப்பம் இருக்கிறது?

விடுதலை என்பது இந்த வியாபாரிகளுக்கு வெறும் கடைச் சரக்கு... போட்டி போட்டு மலிவு விலையில் விற்கும் விற்பனைப் பண்டம்.

வாசகன் புத்திசாலியாகினால், தங்கள் பருப்பு வேகாது என்பது இவர்கள் எல்லாருக்குமே தெரியும்.

ஒரு பத்திரிகை எப்படி இருக்கக் கூடாது என்பதற்கான வழிகாட்டுகின்ற இந்த வழிகாட்டிகளைப் பார்த்து, பத்தோடு பதினொன்றாக இல்லாமல், ஒரு சமூகத்தின் குரலாக ஒரு பத்திரிகை தேவை.

குட்டையைக் குழப்பி பிழைப்பு நடத்துபவர்களுக்கு மத்தியில், தெளிய வைத்து உண்மையைத் தெரிய வைக்க ஒரு பத்திரிகை தேவை.

இருளுக்கு முடிவு கட்டி, ஒளிக்கு கொண்டு செல்ல ஒரு ஊடகம் தேவை.

அந்தத் தேவையை நிவர்த்தி செய்ய பூபாளம் முயற்சிக்கிறது.

தமிழிசையின் பெருமை மிக்க ராகங்களில் ஒன்றான பூபாளம், விடியலில் பாடும் ராகம்.

இருளில் இருந்து ஒளிக்கு செல்லும் விடியலின் ராகமாக பூபாளம் வருகிறது.

இது விடுதலைக்கு வழி காட்ட, விடியலுக்கு கட்டியம் கூறும் பூபாள ராகமா?

இல்லை, வெறும் மா அரிக்கப் பயன்படும் கடதாசியா? என்பதை நீங்களே முடிவு செய்யுங்கள்.

பூபாளம் வார இதழ் Palm Springs Newspapers Ltd நிறுவனத்தினரால் கனடா, ரொறன்ரோவில் வெளியிடப்படுகிறது.
இந்த இதழில் வெளியாகும் ஆக்கங்களில் உள்ள கருத்துக்களுக்கு ஆக்கியோரே பொறுப்பு. அவை பூபாளத்தின் கருத்தைப் பிரதிபலிப்பனவாய் இருக்க வேண்டிய கட்டாயம் இல்லை. ஆக்கங்களின் கருத்துச் சிதைவுறாமல், மாற்றங்களைச் செய்யும் உரிமை ஆசிரியர் குழுவுக்கு உண்டு.
வெளியாகும் விளம்பரங்களுக்கு விளம்பரதாரர்களே பொறுப்பு.
Boobalam is published by Palm Springs Newspapers Ltd.
1345, Morningside Ave #8, Scarborough, On, M1B 2T3 Tel: 416 284 4004 Web:www.boobalam.com
Palm Springs Newspapers Ltd is a division of Palmgrove Media Group Inc.

# கனடியத் தமிழ்ப் பேரர்கள்

**சுல்பிகா**

பெற்றோர்களின் வழக்கமான நாளாந்த பெறுப்புக்களைப்பெறுப்பேற்பதன்மூலம் அவர்களுக்கு நன்மை பயக்கக் கூடிய ஒரு உறவுநிலையைப் பேணுவதாகவே பேரப்பெற்றாரியம் (Grandparenting) நமது கனேடிய தமிழ் சமூகத்தில் நோக்கப்படுகின்றது. ஒவ்வொரு குடும்பத்தினதும் தேவைகளைப் பொறுத்து பேரர்களின் பாத்திரமும் (Roles), பங்களிப்பும் (contributions), உறவுநிலைத் தொடர்பும் (relationship attachment) வேறுபட்டதாக, குறிப்பாக குழந்தைகளின், சிறுவர்களின் பெற்றார்களால் நிர்ணயிக்கப்படும். இவ்வகையில், சிலர் முழு நேரப் பேரப்பெற்றார்களாக உள்ளனர். சிலர் பகுதி நேர, சாயங்காலப் பேரப்பெற்றார்களாக உள்ளனர். சிலர் நீண்ட தூரத்தில் இருக்கும் போது தொலைபேசி, Email, விடுமுறைக்கால போரப் பெற்றோர்களாகவும் உள்ளனர்.

பேரர் பெற்றாரியத்தின் விசேட தன்மைகள்

1. குடும்பத்தின் வரலாற்று ஆசிரியராக இருத்தல்
2. விருப்பு விடயங்களைப் புதிய உறவுகளுடன் பகிர்தல்
3. உலகை இளங்கண்களினூடாகக் காணுதல்
4. ஆர்வமுள்ள இளம் மனதுடன் இணைந்து சங்கீதம், வாசிப்பு போன்ற விருப்பங்களை அனுபவித்தல்
5. பேரப்பிள்ளைகளுக்குத் தேவையான உதவிகளையும் ஊக்கங்களையும் வழங்குதல்
6. எல்லாக் குழந்தை விருத்தி நிலைகளையும் கவனத்தோடும் கரிசனையோடும் பார்த்துக் கொள்ளுதல்
7. பெற்றாரால் கொடுக்க முடியாத விடயங்களை வழங்குதல்

வெற்றிகரமான பேரர்பெற்றாரியத்தினைப் பேணுவதற்கு, பேரர்பெற்றாரியம் செய்வோர்

1. தமது பாத்திரம் பற்றி தெளிவாக இருத்தல்
2. பெற்றார்களுடன் தமது பாத்திரம் பற்றிக் கலந்துரையாடுதல்
3. பிள்ளைகளது பிழையான நடத்தைகள் தொடர்பாக என்ன செய்வது என்பது பற்றி ஒரு உடன்பாட்டுக்கு வருதல்
4. வசதிகள் வாய்ப்புக்களை ஏற்படுத்திக்கொள்ளுதல்.

தவிர்த்துக் கொள்ள வேண்டியவை

1. அன்பு காட்டுதல், கரிசனை காட்டுதல், பாதுகாப்பு, நலம் போன்றவற்றில் ஒரே சீராக இருக்க வேண்டும்.
2. ஒரு பெற்றாராக இருப்பதைத் தவிர்த்தல்
3. பேரர்களின் அன்பை வாங்குவதைத் தவிர்த்தல்
4. பேரர்களுக்கிடையில் பாரபட்சம் காட்டாதிருத்தல்
5. வரையறைகளைப் புறக்கணித்தல்

ஒரு புறத்தில் பேரர்கள் இவ்வாறு குறைபட்டுக் கொள்கிறார்கள்

1. எங்களுக்கு எங்கே என்று நேரம் இருக்குது? பேரர்களின் விஷயங்களைப் பார்த்து முடிக்கவே நேரம் போகிறது. அதோட களைப்பாகிறது. முன்னையப் போல உடம்புக்கும் முடியல. எங்களுக்கு விருப்பம் தான், வெளியில வந்து விடயங்களைத் தெரிஞ்சு கொள்ள, தெரிஞ்சவர்களை கண்டு பேச.

2. பேரர்களை வகுப்பிலிருந்து கூட்டிவர வேண்டும். எங்களுக்கு இதுக்கெல்லாம் நேரம் எங்கே இருக்கு. எங்கட பிள்ளைகள் வேலைக்குப் போகிறதால அவர்களுக்கும் கஷ்டம். வீட்டு வேலைகள் எல்லாத்தையும் பார்க்க ஏலாது. நாங்களும் அவர்களுக்கு உதவியா இருக்கத்தானே வேணும்.

3. எங்கள் பேரர்கள் எங்களுடன் அதிகம் பேசுவதில்லை. எங்கட பேச்சு, சாப்பாடு எதுவும் அவர்களுக்குப் பிடிக்காது. அது அவர்களுக்கு தரக்குறைவு, வெட்கமும் கூட. அது மனதுக்குக் கஷ்டமாயிருக்கும். அதால நாங்களும் அவங்களுடன் அதிகம் பேசுவதில்லை.

4. Telephone வரும்போது உடனே எடுக்காட்டி, அல்லது அவர்கள் வரும்போது கதவை உடனே திறக்கா விட்டால் அப்பா அம்மாவிடம் எங்கள மாட்டி விட்டிடுவாங்கள். கூப்பிட்ட உடனேயே ஓடிப்போகும் போது விழுந்திருவோமோ என்று பயத்தால கொஞ்சம் பிந்திவிடும். பிறகு மருமகள் திட்டிக் கொண்டே இருப்பா. நாள் பூராவும் பாழாகிப்போகும், சும்மா இருந்த சங்க ஊதிக்கெடுத்த மாதிரி ஆகிடும். இப்பவெல்லாம் பிள்ளைகள் வளர்ந்திட்டாங்க. நாங்க இருந்தா இதுகளெல்லாம் correct டா நடக்கணும்.

5. கொஞ்ச நாளா எனக்குத் தூக்கமே இல்லை. எனக்கு ஒரே கவலை. அரோராவுக்குப் போனால் இங்க வரமுடியாது. நாங்க வேலைக்குப்போகும் போது குழந்தைகளோட இருக்க யாருமில்லை நீங்கள் வரவே வேண்டும் என்று மகன் அடம் பிடிக்கிறார். அதுகள் என்னோட கதைக்கிறதுமில்லை. ஆனால் காவல் நாய் தேவையாக இருக்குது.

6. எங்களுக்குச் சரியான விருப்பம் எங்கள் பேரர்களின் வாழ்க்கையில பங்காளியாயிருக்க. ஆனா அது அவர்களுக்கும் அவர்கட தாய் தகப்பனுக்கும் பிடிக்காது. நாங்க எங்கட ஆறு பிள்ளைகளையும் வளர்த்து ஆயிரக்கணக்கான பிள்ளைகளயும் எங்கட 35 வருட ஆசிரிய வாழ்க்கையில எவ்வளவு பிள்ளைகளை வளர்த்திருக்கம். இங்கிலிஸ்ல பேசுறதும் கஷ்டமில்ல எங்களுக்கு. ஆனால் அவர்களுக்கு அவ்வளவு கணக்கில்ல.

மறுபுறம் பிள்ளைகளும் அவர்களது பெற்றோர்களும் பின்வருமாறு கூறுகின்றனர்.

1. அம்மாம்மா எப்பவும் தொணதொணப்பார். படிப்பு படிப்பு எண்டு. எனக்கு ஒரே எரிச்சலா இருக்கும்.

2. Friends பத்தியெல்லாம் details கேக்கிறது எனக்குப் பிடிக்கிறதில்லை. அங்க போகக்கூடாது. இங்க போகக்கூடாது. அவர்களோட சேரக்கூடாது இவர்களோட சேரக்கூடாது. என்றெல்லாம் ஒரே advice.

3. எங்கடை பெற்றாரை நாங்கள் இங்க எடுத்ததே பிள்ளைகளைப் பார்க்கவும் எங்களுக்கு உதவிக்கும் தான். அவர்களுக்கும் அதுதானே விருப்பமாக இருக்கும். இங்கை நாங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டு வாழ்றம். அவர்கள் அவர்கள்ர உல்லாசம் பார்த்தால் நாங்கள் என்ன செய்யிறது.

4. எங்கடை அம்மம்மாவைப் பிடிச்சா நான் எனது request ல சாதிச்சிருவன். ஒரு படியா அவ எனக்காக argue பண்ணி அம்மாவைக் convince பண்ணிருவா. என்னோட அன்புக்காக அவ எதையும் செய்யவா.

பேரப்பிள்ளைகளின் வாழ்க்கையில் பேரர்களின் பங்கு என்ன?
முதியபேரர்களின் உடல், உள, சமூக நலன்கள் கவனத்தில் கொள்ளப்படுகிறதா?

அவர்கள் பாரம்பரிய மானிடச் சொத்தா? குடும்ப வரலாற்று ஆசிரியர்களா?
கூலி பெறாத கூலிகளா? காவல் நாய்களா?

நீங்களே தீர்மானியுங்கள்.

# ரொறன்ரோவில் திரை விருந்து

**சுமதி**

செப்டெம்பர்மாதம்6ம்திகதிதொடக்கம் 16ம் திகதிவரை ரொறொன்டோ நகரம் உலகெங்குமிருந்து வருகை தந்திருக்கும் திரைப்படக் கலைஞர்களால் களைகட்டப் போகின்றது. பொதுவாகக் கனேடியர்கள் ஹொலிவூட் பிரபலங்களைப் பார்ப்பதற்கு ரொறொன்டோ மத்திய பகுதிகளில் கூடுவார்கள். இருப்பினும் ஆசியத் திரைப்படங்கள், முக்கியமாக இந்தியத் திரைப்படங்கள் தற்போது மேற்குலகநாட்டுத் திரைப்பட விரும்பிகளின் கவனத்தை ஈர்த்துள்ளது என்பதனை மண்டபம் நிறைந்த காட்சிகளாகத் திரைப்படங்கள் திரையிடப்படுவதிலிருந்து அறிந்து கொள்ளக் கூடியதாக உள்ளது. டானி பொயில். சிலம்டோக் மில்லியனர், எடுப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகவிருக்கலாம்.

இந்த வருடம் இடம்பெற்றுக் கொண்டிருக்கும் 37வது ரொறொன்டோ சர்வதேச திரைப்படவிழாவில் கவனிக்கப்பட வேண்டிய சில திரைப்படங்களும் காட்சி நேரங்களும்.

1. Him, Here, After (இனி அவன்)
இயக்குனர்: அசோகா ஹாண்டகம
காட்சி நேரமும், திரையரங்குகளும்
Friday September 7
Cineplex Yonge & Dundas 9 PM
Monday September 10
TIFF Bell Lightbox 2 3:15 PM
Saturday September 15
TIFF Bell Lightbox 3 9:30 PM

அனைத்தையும் இழந்து வெறும் அவன் ஆகிப் போன பெயரற்ற ஒருவனின் கதை. தனது வாழ்வின் முக்கிய பகுதிகளைப் போராட்டத்திற்காக அர்ப்பணித்த விடுதலைப்புலி இயக்கத்தின் உறுப்பினர் ஒருவன், போர் முடிவிற்கு வந்த பின்னர் தனது சொந்த ஊரான யாழ்ப்பாணத்திற்குத் திரும்பிச் செல்கின்றான், அங்கே அவன் தனது சொந்தங்களாலும், சமூகத்தினராலும் நிராகரிக்கப்படுவதனால், அவனது எதிர்காலம் எப்படி மாறிப் போகின்றது என்பதனை தமிழ் திரைக்கதையினூடு திரைக்குக்கொண்டு வந்துள்ளார் சிங்களத் திரைப்பட இயக்குனர் அசோகா ஹண்டகம.

2. Midnight's Children
இயக்குனர் தீபா மேத்தா
காட்சி நேரங்களும் திரையரங்குகளும்
Sunday September 9
Roy Thomson Hall 6:30 PM

Monday September 10
TIFF Bell Lightbox 2 9:00 AM

சல்மான் ருஷ்டியைத் அறியாத இலக்கியவாதிகள் இருக்க மாட்டார்கள். அவரின் பெயர் போன நாவலைத் திரைக்குக் கொண்டு வந்துள்ளார்

6ம் பக்கம் பார்க்க...

# காரோடும் வீதியிலே...!



கோடைகாலம் முடிந்து பாடசாலைகளும் தொடங்கிவிட்டன, வேலைத்தளங்களில் விடுமுறையில்சென்றோரும் திரும்பிவிட்டனர் நகரில் வாகன நெரிசல் ஆரம்பமாகி விட்டதை கவனித்திருப்பீர்கள். புதிதாக வாகன ஓட்டுனர் அனுமதிப்பத்திரம் (Driving licence) எடுத்த இளம் சாரதிகள், வாகனம் ஓட ஆயத்தமாக இருப்பார்கள். இவர்களுக்கு பெற்றோர் எந்தவகையில் உதவியையும், அறிவுரைகளையும் வழங்கலாம் என்று பார்ப்போம்.

எடுத்த எடுப்பிலேயே தனியே ஓட்டிப் பார்க்கவேண்டும் என விரும்புவார்கள். அதற்காக கார் சாவியை ஒளித்து வைக்க முடியுமா என்ன?, அதுவும் எத்தனை நாளைக்கு,

அப்படி வைத்தும் கூட சிலரது வீட்டு கராஜ் கதவுகள் உடைக்கப்பட்ட கதை, ரிவேர்ஸில் எடுத்து முன்வீட்டில் சும்மா நின்ற காருக்கு இடித்த கதை, வீட்டிலிருந்த காரை பத்திரமாய் கொண்டு போய் ரோட்டுப்பள்ளத்தில் விழுத்திய கதை என இளம் சாரதிகளிடம் பல கதைகள் உண்டு.

உங்களுக்கு பிள்ளைகளில் நம்பிக்கை வர வேண்டுமானால் அவர்களிடம் ஓடும் பொறுப்பை கொடுத்துவிட்டு நீங்கள் பக்கத்தில் இருங்கள், அப்படி இருக்கும்போது உங்களுக்கு உள்ளே பதட்டமாக இருந்தாலும் அதை வெளியே காட்டிக்கொள்ளாமல் இருங்கள், அப்போதுதான் அவர்களும் பதட்டமில்லாமல் ஓடுவார்கள்.
ஓடும்போது போன் பேசுவது, ரெக்ஸ்ட் பண்ணுவது போன்றவற்றை முற்றாக அனுமதிக்காதீர்கள். வேகக் கட்டுப்பாட்டு பலகையை அடிக்கடி அவதானிக்கச் சொல்லுங்கள்.

வீட்டுபிரச்சனைகள், தேவையில்லாத விவாதங்களை தவிருங்கள், ரேடியோவை பெரிய சத்தமாக வைக்காதீர்கள் இது அவர்களுக்கு கவனக்குறைவை ஏற்படுத்தும். மேலும் உங்கள் நண்பர்களையோ, உறவினர்களையோ ஏற்றுவதை தவிர்ப்பதும் நல்லது. காரணம் அவர்களே உங்கள் பிள்ளையை New driver ஆ! என்று கேட்டு டென்ஷன் படுத்தி விடக்கூடும்.
மிக மிக முக்கியமாக சின்ன சின்ன பிழைகள் விட்டால் உடனே சுட்டிக்காட்டாதீர்கள், நீங்களும் இதேபோல் நிறைய பிழைகள் விட்டதாக எடுத்துக் கூறலாம்.
அடுத்த படிக்கான G லைசென்ஸ்சை எடுக்க ஊக்குவியுங்கள்.

கடைசியாக முடிமானால் அவர்கள் பெயரில் சிறு சேமிப்பு ஒன்றை ஆரம்பித்து மதாமாதம் சிறு பணத்தை போட்டு அவர்கள் பெயரிலேயே சொந்தமாக ஒரு வாகனத்தை வாங்க உதவுங்கள்.

பிறகென்ன கார் திறப்பை வாசலிலேயே தொங்கவிடலாம்.

**சங்கமி**

# அடாவடித்தனத்தின் (Bullying) ஆரம்பம் எது?

ஸ்ரீரஞ்சனி



அடாவடித்தனம் என்பது உறவுமுறையில் ஏற்படும் ஒரு பிரச்சனையாகும். ஒருவர் தனது அடவாடித்தனத்தை தனது உடலால், சொல்லால், அல்லது செய்கையால் அல்லது அவற்றின் ஏதாவது ஒரு சேர்க்கையால் மற்றவர் மேல் காட்டுகின்றார். இதன் பாதிப்பு குடும்ப உறவுகளில், தொழில்சார் உறவுகளில், சமூகஉறவுகளில் என அனைத்து உறவுகளிலும் காணப்படலாம். பாடசாலைகள் மீண்டும் ஆரம்பித்துள்ள இந்த வேளையில், அங்கும் அதிகமாக நிகழும் ஒரு விடயமாக இது இருக்கும். ஏதாவது ஒருவகையில் ஒருவரைக் காயப்படுத்தலாம் என்று தெரியும்போது, அடாவடித்தனம் செய்பவர் தன் கைவரிசையைக் காட்ட ஆரம்பிக்கின்றார்.

Dr.Gordon Neufeld என்ற மனோதத்துவ நிபுணர், இந்த அடாவடித்தனத்தின் உருவாக்கத்தை, அல்பா பாதுகாப்பு உள்ளுணர்வு (வழிகாட்டலும் வழங்கலும்), பீற்றா தங்கியிருத்தல் உள்ளுணர்வு (பின்பற்றலும் தேடலும்) என்னும் இரண்டு வகையான உள்ளுணர்வுகளின் அடிப்படையிலான, ஒரு புதிய கொள்கை மூலம் விளங்கப்படுத்துகின்றார்.

ஒருவருக்கு உதவி தேவையானபோது அல்லது அவரின் தேவையை நிறைவேற்ற இன்னொருவர் அவசியமான போது, அவருக்கு வேண்டிய வழிகாட்டலையும் கவனிப்பையும் வழங்க விரும்பும், மற்றைய மனிதரின் அந்த உள்ளுணர்வு, அல்பா உள்ளுணர்வு எனப்படுகிறது. இதற்கு உதாரணமாக, ஒரு பிள்ளை தனக்கு எட்டாத ஒன்றை, எட்டி எடுக்க முயற்சிக்கும் போது, நாமாகவே உதவிக்குப் போவதைச் சொல்லலாம்.

குடும்பஅமைப்பில், பொதுவாக பெற்றோர்கள், அல்பா உள்ளுணர்வு உள்ளவர்களாகவும் பிள்ளைகள், தங்கியிருக்கும் உள்ளுணர்வு உள்ளவர்களாகவும் இருப்பார்கள். நல்லதொரு தாம்பத்திய உறவிலுள்ள கணவனும் மனைவியும் தேவைக்கேற்ப தமது உள்ளுணர்வுச் செயற்பாடுகளை மாற்றிக்கொள்வார்கள். வெளிச்சூழலில், ஒருவரின் இந்த உள்ளுணர்வுகள் சூழலின் நிலைமைக்கு ஏற்றபடி மாறும்நிலையில் தான் இருக்க வேண்டும். அப்படியில்லாமல், குறித்த உள்ளுணர்வுக்குள் மட்டும் சிக்கிவிடுபவர்கள், மிகவும் ஆதிக்கம் காட்டுபவர்களாகவோ (அல்பா சிக்கல் உள்ளவர்களாக) அல்லது அளவுக்கு அதிகமாகத் தங்கியிருப்பவர்களாகவோ (தங்கியிருப்புச்சிக்கல் உள்ளவர்களாக) இருக்கிறார்கள்.

பொதுவாக, மனிதர்கள் இலகுவில் காயப்படக்கூடியவர்கள். ஒருவருடைய காயப்படக்கூடியதன்மை அவரால் தாங்கமுடியாத அளவுக்கு பாதிக்கப்படும்போது அவருடைய தற்பாதுகாப்பு முயற்சி அவரது மென்மையான உணர்வுகளையும் அதனுடன் தொடர்பான வலிகளையும் உணர்வற்றுப்போகச் செய்துவிடுகின்றது.

இவ்வகையில், தமது மென்மையான, காயப்படக்கூடிய உணர்ச்சிகளுக்கும் தேவைகளுக்கும் தற்பாதுகாப்பு அளிக்க, அல்பாசிக்கல் உள்ளுணர்வு உள்ளவர்கள் முயலும் போது, அல்லது அப்படியான உணர்வுகள் தமக்கு இருப்பதை அவர்கள் ஏற்க மறுக்கும் போது, அவர்களுடைய அந்த அல்பா உணர்வு, அவர்களைத் தவறான வழிக்கு இட்டுச்செல்கிறது. இது அவர்களின் அடாவடித்தனத்துக்குக் காரணமாகின்றது என்கிறார் Dr. Neufeld.

அவ்வேளைகளில், காயப்படுபவர்களைக் கவனிக்கும் அவர்களுடைய அந்த அல்பா உள்ளுணர்வு. தலைகீழாகி, காயப்படுபவர்களைப் பலியாக்கும் உள்ளுணர்வாக மாறிவிடுகின்றது. அதனால், அவர்கள் தங்களுடைய ஆதிக்கத்தை மிரட்டலாக, அவமதித்தலாக, அடாவடித்தனமாக மற்றவர்களில் வெளிக்காட்டுகிறார்கள்.

எனவே, அடாவடித்தனம் செய்பவரிடம், அவர் உங்களுடைய உணர்ச்சிகளைக் காயப்படுத்துகிறார், என்று மட்டும் ஒரு போதும் சொல்லிப் போடாதீர்கள். அப்படிச் சொல்வது, தமது செயல்களுக்கு அவர்கள் ஒரு பலவீனமான இடத்தைக் கண்டுபிடித்து விட்டதாக மட்டுமே அவர்களுக்குச் சொல்லும், என எமக்கு எச்சரிக்கை செய்கிறார், Dr. Neufeld.

அதற்காக, அடாவடித்தனம் செய்பவர்கள் வாழ்க்கை பூராவும் அப்படித்தான் இருப்பார்கள் என்று சொல்லமுடியாது. நாளடைவில் அவர்கள் திருந்தலாம். தமது வாழ்க்கையில், வயதுக்குவந்த ஒருவருடன் ஒரு நிறைவான பிணைப்புக் கொண்டிராமையே, அல்பா சிக்கல் உள்ளவர்கள் இலகுவில் புண்பட்டுப் போவதற்குக் காரணம். அதாவது தங்கியிருக்கும் நிலைமையில் அவர்கள் பாதுகாப்பை உணர்வதில்லை ஆனால், அவர்களுக்கு நல்லதொரு உறவு அமைந்தால் அவர்களுடைய இதயங்கள் மென்மையாகி அந்த நிலையிலிருந்து அவர்களை மாற்றிவிடும் என்றும் நம்பிக்கை தருகிறார், Dr. Neufeld.

Dr.Gordon Neufeld ன் கருத்துப்படி பிள்ளையின் உள்ளுணர்வு அல்பாசிக்கல் நிலையை அடையத் தூண்டுவன:

1.பெற்றோருக்கு முன் அழமுடியாத நிலை
2.அனுபவித்த பிரச்சனைகளிலிருந்து தப்ப அதுவே தற்பாதுகாப்பு வழி என்ற நினைப்பு
3.பெற்றோர் தன்னைக் கவனிக்க ஏற்றவர்கள் அல்ல என்ற உணர்வு
4.பெற்றோருடனான பலமான பிணைப்பு இல்லாத அல்லது தொலைந்த நிலை
5.தன் கூர்மையான உணர்வுகள் கவனிக்கப்படுவதில்லை என்ற ஏமாற்றம்

அல்பா பெற்றோர் யார்:

1.பிள்ளைகளில் அன்பும் நம்பிக்கையும் உள்ளவர்கள்
2.மிரட்டாமல் எல்லைகளை வகுத்து அதனால் பிள்ளைகளுக்கு வரும் விரக்தியையும் கோபத்தையும் விளங்கிக் கொள்ளக்கூடியவர்கள்
3.சுதந்திரத்தை ஊக்குவிப்பவர்கள் பலமான பிணைப்பை உருவாக்குபவர்கள்

அல்பா பெற்றோர் அல்லாதவர் யார்:

1.பிள்ளைகளைத் திருத்த முடியாது எனக் கைவிடுபவர்கள்
2.பிள்ளை கோபத்தில் சொல்பவை, தன்னைத் தாக்குவதற்காகத் தான் என நினைப்பவர்கள்
3.தானும் பாதிக்கப்பட்டவர் அல்லது பிள்ளைக்குச் சமமானவர் எனச் செயற்படுபவர்கள்
4.பிள்ளைகளுக்குத் தண்டனை கொடுப்பவர்கள்
5.பிள்ளை கேட்டதெல்லாம் செய்பவர்கள்

பிள்ளைகளுடன் பலமான பிணைப்பை எப்படி உருவாக்கலாம்?

1.பிள்ளை கதைக்கும்போது அவரின் கண்ணைப் பாருங்கள், அவர் சொல்வதை உங்கள் இதயத்தாலும் காதாலும் கேளுங்கள்
2.தாம் கவனிக்கப்படுகிறார்கள் என்பதை பிள்ளைகள் உணரக்கூடியதாக அவர்களுடன் கதையுங்கள், சேர்ந்து ஒரு செயலைச் செய்யுங்கள்
3.பிள்ளைகளுடன் விளையாடுவதன் மூலம் அவர்களின் உலகத்தில் உங்களையும் இணையுங்கள்
4.பிள்ளைகளின் வழிகாட்டியாகவும் ஆதாரமாகவும் இருங்கள்
பிள்ளைகளை முடியுமான அளவுக்கு இறுகத் தழுவுங்கள்

உசாத்துணை:
http://www.parentscanada.com
http://www.mamacompass.com

# தமிழ் சினிமா கைவிட்ட காந்திமதியும் மனோரமாவும்



குவார்னிகா



தமிழ் சினிமா ஒரு காலகட்டத்தை இழந்துகொண்டிருக்கிறது. தமிழ்ச் சினிமாவின் முன்னோடிகள் என்று நாம் யாரையெல்லாம் கொண்டாடினோமோ அவர்கள் தமது இறுதிக் காலங்களை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். மக்கள் திலகம், நடிகர் திலகம், புரட்சி திலகம் என்ற தமிழ்த் திரையின் மூன்று திலகங்களும் மறைந்து விட்டன. அந்த மூன்றிற்கும் முன்னின்று சண்டையிட்ட வில்லன்களும் மறைந்து விட்டார்கள்.

இடையே ஓடிக்கொண்டிருந்த நகைச்சுவையாளர்களில் அதிகம் பேர் மறைந்துவிட்டார்கள். தற்போது தனது காலத்தையும் நினைவையும் மறந்து கடைசிக் காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார் நடிகை மனோரமா. 1000 படங்களுக்கு மேல் நடித்த பெருமையும் சாதனையும் பெற்றவர் அவர். தமிழ்ச் சினிமாவின் அத்தனை அட்டூழியத்தையும் புரிந்து கொண்டு தமிழகத்தின் முக்கிய முதலமைச்சர்களோடும் நடித்துக் காட்டியவர்.

1958இல் மாலையிட்ட மங்கை தொடக்கம் இப்போதுவரை சினிமா தொலைக்காட்சித் தொடர் என தனது நடிப்புலக வாழ்வில் கொடிகட்டிப் பறந்தவர்.தில்லானா மோகனாம்பாள் படத்தில் ஜில் ஜில் சுந்தரியை மறந்து விடமுடியாதபடி நடித்துக் காட்டியவர். தமிழ்ச் சினிமாவில் ஆச்சி என்றழைக்கப்பட்ட மனோரமா அவர்கள் தனது கடைசிக்காலத்தில் அதிகமான குணச்சித்திர வேடத்தில் நடித்துப் பகழ் பெற்றவர்.

ஆனால் நாமெல்லாம் இந்த ஆச்சிக்குள் நாம் மறந்துவிட்ட அற்புதமானஒரு நடிகை இருக்கிறார். அவர்தான் காந்திமதி. தமிழ் திரையுலகில் ஓர் பழம்பெரும் நடிகை. கிட்டத்தட்ட 350 திரைபடங்களில் பல்வேறு மண்வாசனையுடன் கூடிய குணச்சித்திர வேடங்களில் நடித்து பரவலாக "காந்திமதி அக்கா" என அழைக்கப்பட்டவர். இந்தியப் பொதுவுடமை இயக்கத்தால் ஈர்க்கப்பட்டு அக்கட்சியின் மேடைகளில் பாடியும் புரட்சிகர நாடகங்களில் நடித்தும் வந்தார். எழுத்தாளர் ஜெயகாந்தனின் கதையான யாருக்காக அழுதான் திரைப்படத்தின் மூலம் அறிமுகமாகி மூன்றாம்பிறை சுவரில்லாச் சித்திரங்கள், கரகாட்டக்காரன் போன்ற மிக முக்கிய படங்களில் நடித்து தக்க இடம் தேடியவர்.

தனது மொழியின் உச்சரிப்பிலேயே தனக்கான பாத்திரத்தை வடிவமைக்கும் பாணியைக் கைவரப்பெற்றவர் அவர். அடியேய்ய்.....எடுபட்ட சிறுக்கி...... என்பதும் ஒட்ட அறுத்துப்புடுவேன் அறுத்து என்பதும் அவரது புகழ் பெற்ற வசனங்கள். அவரது கிராமத்தின் நெழிவும் உடல்வாகும் உச்சரிப்பும் பாரதிராஜாவைக் கண்டடைய வைத்தது. உடனே மூன்றாம்பிறை குருவம்மா வந்தாள். தமிழ்ச் சினிமாவில் நாகரிக மொழி கொண்டு கதாநாயகர்கள் நகர்ந்து கொண்டிருக்க நாகரிகமற்ற மொழியினூடு காந்திமதி போன்றவர்களால் கதை நகர்ந்து கொண்டிருந்தது.

காதலும் காதல் மறுப்புமே கதையாகிப் போய்விட்ட சினிமாவிற்குள் கட்டறுபட்ட மொழி காந்திமதியின் நடிப்புக்கூடாக சினிமாவின் தரத்தைச் சாத்தியமாக்கியது. இந்த மொழியும் உடல் வாகும் திரையில் பல இடங்களில் மனோரமாவுக்குச் சாத்தியப்படவில்லை. 1000 படங்களுக்கு அதிகமாக நடித்திருந்தாலும் தான் இன்னும் அரவாணியாக நடிக்கவில்லை அந்த ஆசை எனக்கிருக்கிறது என மனோரமா கவலைப்பட்ட இடங்கள் உண்டு. மனோரமாவுக்குரிய பாத்திரத்தை, ஒரு திரைக் கதையை தமிழ்ச் சினிமா இதுவரை கொடுக்கவில்லை. அவரும் அதை நோக்கி இருக்கவில்லை. மனோரமாவை விட மிகக் குறைந்தளவு படங்களே காந்திமதி நடித்திருந்தாலும் பெயர் சொல்லும் படங்கள் பாத்திரங்கள் உண்டு.

ஆனாலும் தமிழ்ச் சினிமா அவரையும் கைவிட்டது. கமலஹாசன்களும் ரஜனிகாந்துகளும் நிறைந்திருக்கும் தமிழ் நாட்டுச் சினிமாவிற்குள் உண்மையான கலைஞர்களுக்கு வேலையில்லை. உண்மையில் நிலை கொள்ளத்தக்க, பெயர் பதித்திருக்கக்கூடிய தமக்கான சினிமாவைமனோரமாவும் காந்திமதியும் நடித்திருக்க வேண்டும். தமிழ்ச் சினிமா அவர்களைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். வெறுமனே பணமும் பொய்யும் புரளும் சினிமாவிற்குள் இது சாத்தியமில்லை.

காந்திமதியும்மனோராமாவைப் போலவே நாடகத்துறையில் இருந்து தமிழ்ச்சினிமாவிற்கு வந்தவர். அவர்களிடம் சினிமாவை முழுமையாகக் கையகப்படுத்தும் திறன் மிக அதிகமாகவே இருந்தது. ஆனாலும் அவர்களை எந்த இயக்குனர்களும் பயன்படுத்தவில்லை. ஓரளவுக்குப் பயன்படுத்திய பாரதிராஜாவும் பாக்கியராஜாவும் தமது கதையை நகர்த்தப் பயன்படுத்தியதோடு விட்டுவிட்டார்கள்.

தற்போது நாடகத்துறை தந்த சினிமாக்காரர்களின் காலம் முடிந்து கொண்டிருக்கிறது. சினிமாவுக்காகவே வாழ்ந்த பெரும் கலைஞர்களும் வாழ்விற்கும் அப்பால் சினிமாவை நேசித்த கலைஞர்களும் மறைந்து கொண்டிருக்கும் காலத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். சினிமா வெறும் வியாபாரமாகிக் கொண்டிருக்கிறது. சினிமா என்ற மிகப்பெரிய ஊடகம் தமிழ்ச் சமூகத்தில் தவறாகப் பயன்படுத்தப்படுகிறது என்பதைக் கூட அறியாமல் நமது அடுத்த தலைமுறையும் பாழாகத் தயாராகிக் கொண்டிருக்கிறது.

## திரைவிருந்து...

தீபா மேத்தா. தீபா மேத்தாவின் Water திரைப்படத்திற்குக் கிடைத்த வரவேற்பு அவரது கடந்த வருடத் திரைப்படமான Heaven On Earth இற்குக் கிடைக்கவில்லை. இவ்வருடம் தான் இழந்த பெயரை மீண்டும் பெறும் நோக்கத்துடன் சல்மான் ருஷ்டியின் விருது பெற்ற நாவலைத் திரையாக்கியிருக்கின்றார் தீபா மேத்தா. தனது பெயரைக் காப்பாற்றிக்கொள்வாரா என்று படத்தைப் பார்த்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

3. Englsigh Vinglish
இயக்குனர் கௌரி சின்டி
காட்சி நேரங்களும் திரையரங்குகளும்
Friday September 14
Roy Thomson Hall 9:30 PM
Saturday September 15
TIFF Bell Lightbox 1 12:15 PM

பல வருடங்களின் பின்னர் திரைக்கு வந்திருக்கின்றார் சிறீதேவி. அமெரிக்காவிற்குக் குடும்பத்துடன் குடிபுகுந்து கொள்ளும் ஆங்கில அறிவற்ற குடும்பப் பெண் எதிர்கொள்ளும் சவால்களை நகைச்சுவையாத் திரைக்குக் கொண்டு வந்துள்ளார் இயக்குனர் கௌரி. இத்திரைப்படம் ஒரே நேரம் ஹிந்தி, தமிழ், தெலுங்கு என்று பல மொழிகளில் திரையாக்கம் செய்யப்பட்டுள்ளது. பல வருடங்களின் பின்னர் சிறீதேவி திரைக்கு வந்திருக்கின்றார் என்பதைத் தவிரக் குறிப்பிடும் படியாக இத்திரைப்படத்தில் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

4. The Reluctant Fundamentalist
இயக்குனர் மீரா நாயர்
காட்சி நேரங்களும் திரையரங்குகளும்
Saturday September 8
Roy Thomson Hall 9:30 PM
Sunday September 9
The Bloor Hot Docs Cinema 11:45 AM
Sunday September 16
Ryerson Theatre 2:30 PM

பாக்கிஸ்தானி எழுத்தாளரான மோசின் ஹமீட் இன் நாவலைத் திரைக்குக் கொண்டு வந்தள்ளார் மீரா நாயர். இஸ்லாமிய முற்போக்கிற்கும், அமெரிக்க முதலாளித்துவத்திற்குமிடையில் அகப்பட்டுக்கொள்ளும் ஒரு இளைஞனின் கதையைத் தளமாக் கொண்டு அமைந்திருக்கின்றது இத்திரைப்படம். சலாம் பொம்பே, காமசூத்ரா, தி நேம் ஷேக் போன்ற தரமான திரைப்படங்களால் மிகச் சிறந்த பெண் இயக்குனராக மீரா நாயர் திரைப்பட விமர்சகர்களால் அடையாளம் காணப்பட்டவர். நிச்சயமாக இவ்வருடமும் அவர் பார்வையாளர்களை ஏமாற்ற மாட்டார் என்றே நம்புகின்றேன்.

37வது சர்வதேச திரைப்பட விழாவில் மேல் குறிப்பிட்ட திரைப்படங்களில் இனி அவன் ஐத் தவிர மற்றைய மூன்று திரைப்படங்களும் Gala Presentations ஆகக் காட்சிக்கு வந்துள்ளன. அதிலும் இந்தியாவைப் பூர்வீகமாகக் கொண்ட மூன்று பெண் இயக்குனர்களின் திரைப்படங்கள் அதில் இடம்பெற்றிருக்கின்றன என்பது மிக மிக மகிழ்ச்சியான விடையம்.
இவற்றைத் தவிர கன்னட, ஹிந்தித் திரைப்படங்கள் சிலவும் Contemporary World Cinema வின் கீழ் காட்சிக்காக வந்துள்ளன.

---

## யாழ்ப்பாணக் கல்வி...

இவ்விடயம் குறித்து இந்து மகாசபை வெளியிட்டுள்ள அறிக்கையில், வேம்படி பெண்கள் உயர்தரப் பாடசாலை அதிபர் விவகாரத்தில் கல்வி அமைச்சின் நிர்வாக ஒழுங்குக்கமைய அதிபர் நியமனம் இடம்பெற்றும் அது நடைமுறைபடுத்தப்படாமை கவலையளிக்கும் விடயாமாகும் எனவும், இந்நியமனம் மூன்று மாத காலமாகியும் நடைமுறைப்படுத்தப்படாமை மக்கள் மத்தியில் நிர்வாகக் கட்டமைப்பின் மீது அவநம்பிக்கையையும் நிச்சயமற்ற தன்மையையும் ஏற்புடுத்தியுள்ளது எனவும் தெரிவிக்கப்பட்டிருப்பதுடன், இவ்விடயத்தில் காலதாமதம் ஏற்படுத்துவது குறித்து தேசியப் பாடசாலையின் கல்வித்தரத்தின் வீழ்ச்சிக்கு வழிவகுக்கும் எனவும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

இதே வேளை கொக்குவில் இந்துக் கல்லூரியின் அதிபர தென்மராட்சி கல்வி வலயத்திற்கு தற்காலிக இணைப்புச் செய்ப்பட்டுள்ளதனை எதிர்த்து, அப்பாடசாலையின் பெற்றோர்களும், மாணவர்களும் எதிர்ப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளனர். பாடசாலையின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட அதிபரின் இடமாற்றத்தினால் பாடசாலையின் கல்வி வளர்ச்சி பாதிக்கப்படும் என பெற்றோர்கள் கவலை தெரிவித்துள்ளனர். அதேசமயம், பாடசாலையின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட அதிபருக்கு என்ன காரணத்திற்காக தற்காலிக இடமாற்றம் வழங்கப்பட்டது என்பதை தெளிவு படுத்த வேண்டும் என்ற கோரிக்கையினை ஆசிரியர் சங்கப் பிரதிநிதிகள் விடுத்திருக்கின்றனர்.

இந்து மகாசபை வெளியிட்டுள்ள அறிக்கையில், அண்மைக்காலமாக சட்டத்தையும் ஒழுங்கையும் எமது பிரதேசத்தில் அமுல்படுத்துவதில் இடர்பாடுகள் ஏற்படுவது அவதானிக்கப்பட்டுள்ளது எனக் குறிப்பிடப்பட்டுள்ளமை வடக்கின் நிமைமையை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. புலிகளின் அழிவின் பின்னர் உள்ளூர் அதிகாரிகள் சிலர் புதிய எஜமானர்களாக மாறி, இருப்பதனையும் அழித்தொழிக்கும் பணியில் ஈடுபட்டு வருவது மக்கள் மத்தியில் எதிர்புணர்வை தோற்றுவித்திருக்கிறது.
மக்கள் புதிய எஜமானர்களின் அதிகாரங்களிற்கு எதிராக போரடவும் தொடங்கியிருக்கிறார்கள்.

---

## ராதிகா சிற்சபேசனின்...

பகுதிகளில் அமையவிருப்பதால் இது கொன்சர்வேற்றிக் கட்சிக்கு சாதகமாக இருக்கும் என்று கூறப்படுகிறது. புறநகர்ப் பகுதிகளில் புதிய குடிவரவாளர் வாழ்வதனால் அவர்களின் அரசியல் முக்கியத்துவம் அதிகரிக்கவும் வாய்ப்பு இருக்கிறது.
ஒன்ராறியோ மாகாணத்திற்கான கமிசன் 121 தொகுதிகளிற்கான எல்லைகளை முன் மொழிந்திருக்கின்றது.

புதிய எல்லைகளைப் பார்க்க www.federal-redistribution.ca.

ஒன்ராறியோற்கான புதிய 15 தொகுதிகள் பிராம்ரன் (2) கேம்பிறிஜ், டர்கம் (2), கமில்ரன், மார்க்கம் (2)இ மிசிசகுவா, ஓக்வில், ஒட்டவா, சிம்கோ, ரொறன்ரோ (2), யோர்க் ஆகிய இடங்களில் அமையவிருக்கின்றன.

புதிய எல்லைகள் மாத்திரமல்ல பல தொகுதிகளின் பெயர்களும் மாற இருக்கின்றன.

ராதிகா சிற்சபேசனின் ஸ்காபரோ றூஜ் றிவர் ஸ்காபரோ வடக்கு தொகுதியிலும் ஸ்காபரோ கிழக்கு தொகுதியிலும் சேருகின்றது. புதிய எல்லைகள் ராதிகாவுக்கு சாதகமா என்பது விவாதத்திற்குரிய விடயம்.

இது இவ்வாறிருக்க இவ்வளவு காலம் எம்பிமாருக்குப் பின்னாலை போய் என்னத்தைக் கண்டம், நாங்களும் தேர்தலிலை கேட்டால் என்ன என்று பல தமிழ் பிரமுகர்கள் வாயூறத் தொடங்கியிருக்கிறார்கள்.

லிபரல் டைனசோரின் வீழ்ச்சி! புதிய எல்லைகள்! புதிய தொகுதிகள்!

வாராது வந்த மாமணியை விடுவோமா!

மாப்புளிக்கிறது அப்பத்திற்கு நல்லதுதானே!

மகேஸ்

---

# என் எண்ணத்தில் இருந்து...

### நமு பொன்னம்பலம்

கனடா இசைக் கலா மன்றம் அடுத்த பரிணாமம் எடுக்குமா?

கனேடிய கர்நாடக இசை உலகுக்கு கனடா இசைக் கலா மன்றம் ஆற்றி வரும் பணிகள் எண்ணில் அடங்காதவை. வேறு எந்த மேற்கத்திய நாடுகளிலும் இல்லாத அளவுக்கு பற்பல ஆசிரியர்களையும் பல்வேறுபட்ட திறமைகளை தன்னகத்தே கொண்ட கர்நாடக மாணவ சமுகத்தையும் தன்னுள் உள்வாங்கி இம்மன்றம் ஆற்றி வரும் பணிகள் பல.

இருந்தபோதிலும் பாரிய வெற்றிடம் ஒன்றை இம்மன்றம் எம் சமூகத்திடம் ஏற்படுத்தியிருப்பதை யாரும் மறுக்க முடியாது. எம் சமுகத்தில் சாதாரண மக்கள் முதல் படித்து பட்டம் பெற்று உயர்வுகொண்ட மனிதர்கள் வரை தமது குழந்தைகளை கர்நாடக இசைக்கு அறிமுகம் செய்யாத குடும்பங்கள் இல்லை என்றே கூறவேண்டும். இவ்வாறு பயின்ற சிறார்கள் அரங்கேறும் முதல் நாளில் நம் குடும்பங்கள் ஆனந்தப் பரவசம் அடைவதும் இம்மேடைகளில் இசைக் கலா மன்ற பிரமுகர்கள் வந்தேகி வாழ்த்துரை வழங்குவதும் சம்பிரதாயம்.

இம்மேடைகள் இத்தோடு இன்னொரு காட்சியையும் எமக்குத் தரும். அது எதுவெனில் கனடாவிற்கு வெளியில் இருந்து தருவிக்கப்பட்ட விற்பன்னர்கள் மேடையை அலங்கரிப்பார்கள். இது ஓரிரு வருடமல்ல இருபது வருடத்துக்கு மேலாக நாம் காணும் காட்சிகள். அரங்கேற்றம் பல ஆயிரம் டாலர்களை விழுங்கி விடும். அரங்கேறியவர்கள் அதேதினத்தில் அனாதையாகி விடுவார்கள்.

அண்மையில் ஒரு வீட்டுக்குச் சென்ற நேரத்தில் கடுகதி வேகத்தில் வீட்டார் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தனர். சில வருடத்திற்கு முன்பு அரங்கேறிய ஒரு இளம் கலைஞனின் தாயும் தந்தையும் இக்கலைஞனுடன் கோவில் மேடை ஒன்றுக்கு இடம் பிடிக்க ஒடுகின்ற காட்சியை நான் பார்த்தேன். அரங்கேறும் மேடைகளில் இறக்குமதிகளை பணம் கொடுத்து வருவித்துவிட்டு நாம் சின்ன மேடைக்கு அலைகின்ற காட்சி பரிதாபகரமானது. நாம் பணம் கொடுத்து எமது மேடைகளை இறக்குமதி சரக்குக்கு கொடுத்து விட்டு ஒரு இளம் சங்கீத சமூகத்தை ஊமைகளாக மாற்றி வருவது எதனால் என்பதை நாம் விளங்க முற்படவேண்டும்.

இந்த நிலைமையினை பல்வேறு தடவைகளில் நான் எழுதி வந்த போதிலும் பரிகாரம் கிடைக்காத நிலைமையினால் தொடர்த்தும் இதே கருத்தை மீண்டும் வலுயுறுத்த விரும்பியே இவ்வாறு எழுதுகிறேன்.

மறு முனையில் அரங்கேற்றம் செய்யும் புதிய கலைஞர்களும் அவர்தம் குடும்பமும் உள்ளூார் கலைஞர்களினால் ஏற்படுகின்ற சிரமத்தை உணர்ந்து வெளியூர் கலைஞர்கள் உதவியோடு அரங்கேற்றம் செய்ய எண்ணுவதாககக் கூறுவதிலும் ஓர் உண்மை உண்டு. உள்ளூர் கலைஞர்கள் தமது நேரத்தை அர்ப்பணிப்பு செய்வது கிடையாது என்ற குறையும் இருக்கவே செய்கின்றது.

இந்நிலையில் இசை கலா மன்றம் போன்ற அமைப்பு தனியே பரீட்சைகளை நடாத்தும் அமைப்பாக இல்லாமல் அடுத்த படிக்குத் தன்னை தயார் படுத்துவதும் அவசியம் ஆகின்றது. சுமார் இருபது வருடமாக இசை பயின்ற இளம் கர்நாடக கலைஞர்களை ஒரே அமைப்பின் கீழ் ஓர் கெ□ண்டு வந்து அவர்தம் மேடைகளை எமது சமூகத்தின் முன் உருவாக்கிச் சாதனை படைக்கட்டும். அதேபோன்று அரங்கேறும் ஒவ்வொரு மேடைகளிலும் ஒரு பகுதி நேரமாவது உள்ளூர் கலைஞர்களின் பங்களிப்பை இசை கலா மன்றம் உறுதி செய்யட்டும். இவ்வாறு செய்யாத மேடைகளில் இசை கலா மன்ற பிரமுகர்கள் தோன்றி வாழுத்து வழங்குவதை நிறுத்தத் தயாரா?

எமது கலைஞர்கள் மேடைக்கு உரியவர்களேயன்றி சபைக்கு மட்டும் உரியவர்கள் அல்லர். கர்நாடக சங்கீத உலகு இதனை உணர்ந்து கொள்ளாது விட் டாலும் கூட இசை கலா மன்றமும் கூட இதனை உணராதா என ஏங்குகிறேன்.

---

## சோடியைத் தேடுது சொக்ஸ்!



நீங்கள் அன்றாடம் பாவிக்கும் காலுறைகள் அடிக்கடி தொலைந்து போகின்றதா?, அல்லது ஒன்றினுக்கொன்று பொருத்தமில்லாத காலுறைகளை அணிகிறீர்களா?
குளிர்காலமும் வருகிறது கவலையை விடுங்கள்.
இரண்டு மரக் கூடைகளை எடுங்கள், ஒன்றில் துவைத்த சொக்ஸை சோடிகளாக இணைத்து போட்டுவிடுங்கள், மற்றைய கூடையை பக்கத்தில் வைத்துவிடுங்கள். இரண்டு கூடைகளையும் காலணிகள் வைக்கும் இடத்திற்கு பக்கத்தில் அல்லது நடைபாதையில் வைத்தால், காலுறைகளை எடுப்பதற்கு இலகுவாக இருக்கும், அதுவும் சூடாக்கும் கருவிக்குப் பக்கத்தில் வைத்தால் குளிர் காலத்தில் காலுறைகளும் சூடாக அணிய இதமாக இருக்கும்.
வீட்டினுள் நுழையும்போது கழற்றி மற்றைய கூடைக்குள் போட்டுவிடுங்கள். காலுறைகளும் இணைபிரியாமல், வீடு முழுக்க இழுபடாமல் இருக்கும், வீட்டில் இருப்பவர்களின் பாவனைக்கு ஏற்ப கூடைகளின் அளவை தெரிவு செய்யுங்கள். நடைமுறைப் படுத்தி பாருங்கள் இதன் சுலபம் புரியும்.

கூடைகளை எங்கே வாங்கலாம்?
கனேடியன் ரயர், வால்மார்ட் , டாலர் ஸ்டோர், சைனீஸ் கடைகளிலும் வாங்கலாம்.

சங்கமி

பரம் ஜி பார்வையில்....

# பூபாளம்

உலகை ஆளும் இசைத்துறையில் தென்னிந்தியாவின் பங்களிப்பாக விளங்கும் கருநாடக இசையில் சொல்லப்பட்டுள்ள பல இராகங்களில் முக்கியமான ஒரு இராகம் பூபாளம். மிகப்பழமையான இராகங்களில் ஒன்றான பூபாளம் மங்களகரமான ஒரு இராகமாக கணிக்கப்பட்டிருப்பதனால் அதிகாலை நேரத்தில், விடியற்காலை வேளையில் பாடப்படும் பாடல்களின் இராகமாக முக்கியத்துவம் பெறுகின்றது. புதிதாக ஆரம்பமாக இருக்கும் ஒரு நாள் நல்ல நாளாக இருத்தல் வேண்டும் என்பதே பலரதும் எதிர்பார்ப்பாக இருப்பதனால் அப்புதிய நாளின் வருகையை கொண்டாடும் முகமாக பாடப்படும் பாடல்களை பூபாளம் இராகத்தில் பாடுவது நன்மைகளை கொண்டு வரும் என பலராலும் நம்பப்படுகிறது.

சுதந்திரம் பெற்ற இலங்கைத்தீவில் சிறுக சிறுக முடக்கப்பட்டு வந்த சிறுபான்மை தமிழர்களின் அடிப்படை மனித உரிமைகளை மீளப்பெற முயன்ற பாதைகளில் சந்தித்த பல துர்ரதிர்ஸ்ட நிகழ்வுகளால் எமது தமிழ் இனம் பல இன்னல்களையும் துயரங்களையும் அழிவுகளையும் சந்தித்தது. அவற்றின் விளைவாக, போகும் பாதை புரியாது, எதிர்காலம் பற்றிய எண்ணக் கனவுகள் கலக்கங்களுடன், தாய் மண்ணிலும் புலம் பெயர் நாடுகளிலும் விடியல்களை தேடி அலையும் ஒரு இனமாகவே இன்று வாழ்ந்து வருகின்றது.

துவண்டு போயிருக்கும் எமது உள்ளங்களுக்கெல்லாம் உவகை அளிக்கும் வகையில் நல்ல பல விடயங்களை எம்முடன் பகிர்ந்து கொள்ளமுன்வந்து, எமதுஎதிர்காலம் நன்மையாக அமையப்போகின்றது என நம்பிக்கைகளை தரும் வகையில், மங்களகரமாக, காலை வேளைகளில் பாடப்படும் பாடல்களின் இராகத்தின் பெயரை கொண்டு ஆரம்பிகப்படும் ஊடகம் பூபாளம் தமிழ் மக்களுக்கு பல நன்மைகளை செய்யும் எனும் நம்பிக்கைகளை தருகின்றது. பூபாளத்தை தமிழர் மத்தியில் தருவதற்கு முயற்சிப்பவர்கள், அருகி வரும் தமிழ் உணர்வுகளையும் ஒற்றுமைகளையும் தமிழர்கள் மத்தியில் உருவாக்கி விடுவர் என நிச்சயம் நம்பலாம்.

மனித்தை நேசித்து மற்றவர் உள்ளத்து உணர்வுகளை மதிப்பதால் மட்டுமே ஒற்றுமையை மனிதர்கள் மத்தியில் உருவாக்கலாம் என்பதில் நம்பிக்கை வைத்து உழைக்கும் ஒரு சாதாரண மனிதன் பரம் ஜியும், பூபாளத்தின் வரவிற்காக வாழ்த்துக்கள் மட்டும் சொல்லுவதுடன் நின்று விடாமல், வாரம் தவராமல் பரம் ஜியின் பார்வைகள் வழியாக சந்திக்க இருப்பதையிட்டு மனம் மகிழ்ச்சி அடைகின்றான்.

பார்வைகள் தொடரும்......

# வாறார் திரும்பவும் அடி வாங்கித் தாறதுக்கு!

மீண்டும் பத்திரிகை ஒன்று வரப் போவதாக ஆசிரியர் சொன்ன போது, கியூறியஸ் மனதில் எழுந்தது ஒரே ஒரு எண்ணம் தான்.

வாறார் திரும்பவும் அடி வாங்கித் தாறதுக்கு!

ஏங்க, எற்கனவே வந்த நீங்க ஏமாளியானீங்க... எல்லாம் தெரிஞ்சிருந்தும் புத்தி சொல்ல வாறீங்க!

நீங்க ஒரு முட்டாளுங்க... நல்லாத் தெரிஞ்சவங்க நாலு பேரு சொல்லியிருக்காங்களே!

ஹ்ம்... ஆள் அசைவதாக இல்லை.

Old warriors never die, they just fade away.

ஜப்பானை வெற்றி கொண்ட பெருமை மிக்க ஜெனரல் மக்ஆதர், தான் தலைமை தாங்கிய கொரிய யுத்தத்தில் எதிர்பார்த்த வெற்றியைப் பெற்றுக் கொடுக்காததால் பதவியிலிருந்து நீக்கப்பட்டவர். தான் ஓய்வு பெற்ற போது ஆற்றிய உரையில் தான் இப்படிச் சொல்லியிருந்தார்.

நம்ம Old warrior உம் கொஞ்சக் காலமாக தலை மறைவாகத் தான் இருந்தார். பிறகெதற்கு இந்த விபரீத எண்ணமெல்லாம்?

உறங்கிக் கிடந்த தமிழனை காலையில் தட்டி எழுப்ப, காலை சம்பந்தமான சகல பெயர்களிலும் பத்திரிகைகள் வருகின்றன. போதாக்குறைக்கு அவனைத் தூங்க விடாமல் உலைக்க 24 மணி நேர வானொலிகள் வேறு. இதற்குள் எதற்கு புதிதாக?

கனடாவில் உள்ள ஆண்களில் பாதிப் பேர் முன்னாள் பத்திரிகை ஆசிரியர்கள். மீதிப் பாதிப் பேரும் பத்திரிகை ஆரம்பிக்கும் கனவில் இருப்பவர்கள். எதிர்காலப் பத்திரிகை ஆசிரியர்கள்.

பத்திரிகை வெளியிட்டு, சமுகத்தை சீர்திருத்தும் உயர்ந்த எண்ணமோ, உலகத்தை மாற்றியமைக்கும் இலட்சியமோ இல்லாவிட்டாலும், குறைந்த பட்சம் அதைக் காட்டி, நிகழ்ச்சிகளுக்கு மீடியா என்று இலவச நுழைவுச் சீட்டாவது கிடைக்கும் என்ற எண்ணத்தில் இருப்பவர்கள். அல்லது போனால், சினிமா நடிகைளைக் கூட்டி வந்து ஆண்டு விழா நடத்தலாம், வயாகரா... சே... நயாகரா காட்டலாம் என்றாவது கனவு காண்பவர்கள்.

இந்த நிலையில் அவர்களின் பிழைப்பைக் கெடுப்பானேன்?

கியூறியஸ் சொல்லாத புத்திமதியா?

கெடுகுடி சொற் கேளாது.

கியூறியஸ் சொன்ன புத்திமதியைக் கேட்காத ஒரு பெருங் கூட்டம் நாசமாய் போச்சு. இந்த வரலாறு காக்கா, குருவி உட்பட்ட வனவிலங்குகள் யாருக்கும் தெரியாது. குரங்குக்குப் புத்தி சொன்ன தூக்கணாங் குருவிக் கதையாக, கூட்டை இழந்து கியூறியஸ் அல்லல்பட்ட கதையும் யாருக்கும் தெரியாது.

மனிசன் மசிவதாக இல்லை.

இது பத்தோடு பதினொன்று இல்லை!

ஓகோ, அப்படியா?

தமிழன் எங்கேய்யா பத்திரிகை படித்தான்? தமிழன் எங்கே எதைத் தேடி வாசித்தான்?

தமிழன் படித்தால் மொட்டை நோட்டீஸ் மட்டும் தான் வாசிப்பான்.

கொஞ்ச நாளைக்கு முன்னால் ஒரு வானொலி பற்றிய மொட்டை நோட்டீஸ்களை கியூறியஸூம் ஆர்வத்தோடு வாசித்திருந்தான். அந்த நோட்டீஸ்களின் பெயர் சொல்லப் பயந்த ஆசிரியர்கள் அப்புறம் தலைமறைவாகி விட்டார்கள்.

சில நேரம் டொலர்களுக்கு விலை போகும் இந்த Sold warriors might have faded away.

யாருக்குத் தெரியும்?

இந்தா வரப் போகுது அடுத்த இதழில் என்று கியூறியஸையே சுத்திய அந்தப் பிரதிகள் வரலாற்றுப் பெருமை மிக்கவை. அடுத்த இதழுக்காய் கியூறியஸ் கடை கடையாய் அலைந்தது தான் மிச்சம். காரணம் அந்த மொட்டை நோட்டீஸின் கதாநாயகன் கியூறியஸின் முன்னாள் நண்பன்.

தனக்கும் ஒரு பதினைந்து நிமிடப் புகழ் கிடைக்கும் என்ற நினைப்பில் தன்னைப் பற்றி ஏதாவது அந்த மொட்டை ஆசிரியர்கள் எழுத மாட்டார்களா என்ற ஒரு நப்பாசை. நீண்ட நாளாய் தொடர்பே இல்லாத அந்த மாஜி நண்பனின் கிசுகிசுக்களை கொஞ்சம் காதில் போடலாம் என்ற அல்ப புத்தி.

இப்படியாகத் தானே கொஞ்ச நாள் பல்வேறு மொட்டை நோட்டீஸ்கள் தமிழினத்தையும் கியூறியஸையும் இன்பக் களிப்பில் ஆழ்த்திக் கொண்டிருந்தன.

இந்த மொட்டை நோட்டீஸ்களைத் தான் தமிழன் ஒழுங்காகத் தேடிப் பிடித்து வாசித்தான்.

மற்றும்படி, தாயகக் கடலில் பிடித்து, கனடா வரைக்கும் நீரில் உயிரோடு வந்த உயிர்மீனை வாங்கிக் கொண்டு போகும்போது மட்டும், மீதி மீனைச் சுற்றி பிரிட்ஜில் வைப்பதற்காக கடையில் பத்திரிகைகளை அள்ளிச் செல்வான். இதுதான் தமிழனின் வாசினை லட்சணம்.

இதற்குள் எதற்கு இன்னொரு பத்திரிகை...?

ஓ! விளம்பரங்கள்!

இப்படியாகத் தான் நண்பர் ஒருவர் புதிதாக தொழில் முயற்சி ஒன்றை ஆரம்பித்து, பத்திரிகை ஒன்றில் விளம்பரம் போட்டார்.

போட்ட நண்பர் தொலைபேசிக்குப் பக்கத்தில் காத்திருந்தார்... தமிழ் மகன் நிர்வாகத்தில் இயங்கும் தொழில் முயற்சிக்கு, 'தமிழர் வணிகங்களை வளர்ப்போம்' என்று யாராவது அழைக்கக் கூடும் என்ற நப்பாசையில்.

பன்னிரண்டு அழைப்புகள் வந்தன. அதில் நான்கு அழைப்புகள் 'அண்ணை, மற்ற இடத்தில மலிவாகச் செய்யலாம்' என்று விளம்பிச் சென்றன. மீதி எட்டு அழைப்புகளும் மற்றப் பத்திரிகைகளிடம் இருந்து வந்தவை.

'அண்ணை, எங்கட பேப்பரில நீங்கள் மலிவாக விளம்பரம் போடலாம்' என்று!

மொத்தத்தில், சமூகத்தையும் சீர்திருத்த முடியாது. விளம்பரத்தையும் நம்பியிருக்க முடியாது.

பிறகென்ன?

தமிழர்கள் வாசிக்க வேண்டும் என்றால், மொட்டை நோட்டீஸ் தான் வெளியிட வேண்டும்.

மொட்டை நோட்டீஸ் எல்லாப் பத்திரிகைகளையும் விட சேர்க்குலேசன் அதிகமானது. அத்தோடு அதில் விளம்பரம் போட முடியாது.

இழுக்க இழுக்க இறுதி வரை இன்பம் தரும் செய்யது பீடி போல, திருப்ப திருப்ப வரும் முழுப்பக்க விளம்பரங்கள் எதுவுமே இல்லாமல், முழுக்க முழுக்க செய்திகள்... சுடச் சுட!

விளம்பரங்கள் மருந்துக்கும் கிடையாது!

உண்மையிலேயே சமூகத்தைச் சீர்திருத்தும் நோக்கில், உலகத்தையே மாற்றியமைக்கும் எண்ணத்தில் வெளியிடப்படுபவை மொட்டை நோட்டீஸ்கள் தான். அதன் ஆசிரியர்கள் தான் பேருக்கும் புகழுக்கும் பணத்துக்கும் ஆசைப்படாதவர்கள்.

எங்காவது மொட்டை நோட்டீஸ் விட்ட யாராவது தன்னை 'நான் கனடாவில் பத்திரிகையாசிரியர், எனது பத்திரிகை ஒரு லட்சம் பிரதிகள் விற்கின்றன' என்று தமிழ்நாட்டில் போய் கதை விட்டிருப்பதைக் கண்டிருக்கிறீர்களா?

மொட்டை இதழ் ஆசிரியர் யாராவது தன்னுடைய நோட்டீசை சினிமா ஹீரோயின் கையில் கொடுத்து போஸ் கொடுக்க வைத்திருப்பாரா?

மொட்டை விட்ட யாராவது நடிகைகளைக் கூட்டி வந்து 'மொட்டைக் கலை இரவு' நடத்தியிருக்கிறார்களா?

எந்த வித விளம்பரமும் வாங்காமல், சமூகம் திருந்த வேண்டும் என்பதற்காக தன்னுடைய சொந்தப் பணத்தைச் செலவிட்டு, மொட்டை நோட்டீஸ் விடுபவர்கள் தான் உண்மையான சமூக முன்னேற்ற வாதிகள். தனக்கு எந்த விளம்பரமோ, பெருமையோ கிடைக்க வேண்டும் என்றில்லாமல் தன்னடக்கத்துடன் தன் பெயரைக் கூட போடாமல் மொட்டை நோட்டீஸ் விடுபவர்கள் தான் உண்மையான சமூக சீர்திருத்த வாதிகள்.

இப்படியெல்லாம் மொட்டை நோட்டீஸ் விட்டு, எங்கள் தமிழ் கூறு நல்லுலகத்தின் வளர்ச்சிக்கு உதவுவோம் என்றில்லாமல், ஒரு கூட்டம் பத்திரிகை வெளியிடும் நோக்கில் புறப்பட்டிருக்கிறது.

தமிழன் வாசிக்க வேண்டும் என்று விரும்பினால்,

நாங்கள் எழுதுவதை பலர் வாசிக்க வேண்டும் என கனவு கண்டால்,

உலகைத் திருத்த வேண்டும், சமூகத்தை சீர்திருத்த வேண்டும் என்று யாராவது நினைத்தால்...

பத்திரிகை விடக் கூடாது, மொட்டை நோட்டீஸ் தான் விடவேண்டும்.

கியூறியஸ்க்கோ இங்கே நடக்கிறது எதுவுமே நல்லதாகப் படவில்லை. கூட்டத்திற்குள் மாட்டிக் கொண்டு விட்டான்.

என்னவோ, திரும்பியும் அடி வாங்காமல் இருக்க வேண்டும் என்றால், வெளியில் வருபவரைப் பார்த்து சிரிக்காமல் இருக்க வேண்டும் என்பது மட்டும் தெரிகிறது.

பேறுஞர் கல்லாநிதி கியூறியஸ் ஜி

# கியூபெக் தேர்தலில் பிரிவினைவாதக் கட்சி வெற்றி

கியூபெக் மாகான தேர்தல் புரட்டாதி மாதம் 4 ஆம் திகதி (2012:09:04) நடைபெற்றது. இந்த தேர்தலின் முடிவில் பிரிவினைவாத கட்சியான PQ 31.93% ஆதரவுடன் 54 ஆசனங்களை வென்று ஆட்சியை கைப்பற்றியது. இதுவரை ஆண்ட லிபரல் கட்சி 31.20மூ ஆதரவுடன் 50 ஆசனங்களை மட்டுமே வென்று தோல்வியை தழுவியது. அது மட்டுமன்றி லிபரலின் தலைவரும் இதுவரை கியூபெக் மாகாண முதவருமாக இருந்த Jean Charest யும் தோல்வி கண்டுள்ளார்.

ஆதியில் கனடாவின் மத்திய அரசியலில் Conservative கட்சியில் இருந்து பின் கியூபெக் மாகாண லிபரலில் இணைந்த Jean Charest 2003, 2007, 2008 ஆம் ஆண்டுகளின் தேர்தல்களில் வென்று அம்மாகாண முதல்வர் ஆகியிருந்தார். அவர் இன்போது அரசியலில் இருந்து ஓய்வு பெறப்போவதாக கூறியுள்ளார்.

PQ இன் தலைவியான Pauline Marois கியூபெக் இன் முதலாவது பெண் முதல்வர் ஆவார். இவரின் கட்சி ஒரு பிரிவினைவாத கட்சி என்றாலும் அவர்கள் அறுதி பெரும்பான்மை அடையாதபடியால் பிரிவினால் நடவடிக்கைகளில் ஈடுபட மாட்டார்கள் என கருதலாம். இந்த அவையில் மொத்தம் 125 ஆசனங்கள் உண்டு. அதனால் அறுதி பெரும்பான்மைக்கு குறைந்து 63 ஆசனம்கள் தேவை. அதேவேளை ஏனைய கட்சிகள் பிரிவினையை ஆதரிக்காதவிடத்து PQ அந்த விடயத்தை கையாள பின்வாங்கும் என கருதலாம்.

இந்த தேர்தலில் புதியதோர் கட்சியும் களமிறங்கி வெற்றிவாகை சூடியுள்ளது. கடந்த வருடம் ஆரம்பிக்கப்பட்ட CAQ (Coalition Avenir Quebec) வியக்கத்தக்க வகையில் 27.05 வீத ஆதரவுடன் 19 ஆசனங்களை கைப்பற்றியுள்ளது. ஆகவே லிபரலும் கட்சியும் CAQ கட்சியும் உம் இணைத்தால் PQ இன் எந்த நடவடிக்கைகளையும் முறியடிக்க முடியும்.

தேர்தலில் வென்ற PQ உடனடியாக முனைய ஆட்சியாளர்களால் முன்வைக்கப்பட்ட சில சட்டங்களை இரத்து செய்யப்போவதாக அறிவித்துள்ளது. முன்னைய லிபரல் அரசு மாணவர் வீதி போராட்டங்களை தடுக்க Bill 78 ஐ நடைமுறைபடுத்தியிருந்தது. அச்சட்டம் இப்போது இரத்தாகும் என அறிவிக்கப்பட்டுள்ளது. அத்தோடு மாணவர்களின் கட்டணங்களும் அதிகரிக்கப்பட மாட்டாது என அறிவிக்கப்படுள்ளது.

இதே Pauline Marois தேர்தல் பிரச்சாரங்களின் போது தான் வென்றால் எல்லா வேட்பாளர்களும் பிரெஞ் மொழிக்கான தராதர பரீட்சை ஒன்றில் தமது பிரெஞ்சு மொழித்திறனை நிருபிக்கவேண்டிய சட்டம் ஒன்றை கொண்டுவர உள்ளதாக கூறியிருந்தார். ஆனால் அதை ஒரு சிறுபான்மை அரசு செய்ய முடியுமா என்பது கேள்விக்குறியே.

## கிழக்குத் தேர்தலில்...

தலைவர் இரா.சம்பந்தன் உட்பட பல பாராளுமன்ற உறுப்பினர்கள் மற்றும் கட்சி முக்கியஸ்தர்கள் தீவிரமான பிரச்சாரப் பணிகளை மேற்கொண்டு வருகின்றனர். கட்சி ஆதரவாளர்கள் கிராம மட்டத்தில் வீடுவீடாகச் சென்று பிரச்சாரங்களை மேற்கொண்டு வருகின்றனர். வடக்கிலிருந்து கூட்டமைப்பின் பிரதிநிதிகள் - ஆதவாளர்கள் குழுவினர் கிழக்கிற்கு சென்று கூட்டமைப்பினருக்கான ஆதரவுப் பிரச்சாரத்தில் ஈடுபட்டும் வருகின்றனர்.

ஐ.ம.சு.கூட்டமைப்பின் பல அமைச்சர்களும் முக்கியஸ்தர்களும் கிழக்கு மாகாணத்தில் தேர்தல் பிரச்சார நடவடிக்கைகளில் ஈடுபட்டுவருகின்றனர். 03ம் திகதி மட்டக்களப்பிற்கும் 04 ம் திகதி திருகோணமலைக்கும் விஜயம் செய்த ஜனாதிபதி அவர்கள் பல அபிவிருத்தித் திட்டங்களை ஆரம்பித்து வைத்ததுடன் பிரச்சார நடவடிக்கைகளையும் மேற்கொண்டுமிருந்தார்.

சி.சந்திரகாந்தன்(பிள்ளையான்), வி.முரளிதரன்(கருணா) ஆகியோரும் தேர்தல் பிரச்சாரப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

ஸ்ரீ.மு.காங்கிரஸின் தலைவர் ரவூப் ஹக்கீம் மற்றும் அக்கட்சியின் முக்கிய தலைவர்களும் தேர்தல் பிரச்சாரப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

ஐ.தே.கட்சியின் தலைவர் ரணில் விக்கிரமசிங்க மற்றும் அக்கட்சியின் முக்கிய தலைவர்களும் கிழக்கில் தேர்தல் பிரச்சாரப் பணிகளில் ஈடுபட்டுள்ளனர்.

இதே வேளை தேர்தல் வன்முறைகள் மற்றும் முறைகேடுகளும் அதிகரித்துமுள்ளன. கிழக்கு, வட மத்திய, சப்பிரகமுவ ஆகிய மூன்று மாகாண சபைகளுக்கான தேர்தல் தொடர்பில் இது வரை 301 தேர்தல் விதிமுறை மீறல் சம்பவங்கள் பதிவாகியுள்ளதாக நீதியானதும் சுதந்திரமானதுமான தேர்தலுக்கான மக்கள் இயக்கம் தெரிவித்துள்ளது. இவற்றில் அதிகளவான சம்பவங்கள் கிழக்கு மாகாணத்திலேயே அதுவும் அம்பாறை மாவட்டத்திலேயே பதிவாகியுள்ளன.

தேர்தல் விதிமுறைகளை மீறல், சொத்துக்களுக்கு சேதம் விளைவித்தல், நபர்கள் மீதான தாக்குதல்கள், அச்சுறுத்தல் விடுத்தல், அரச சொத்துக்களை பாவித்தல் என பல்வேறு சம்பவங்கள் பதிவாகியுள்ளன.

அக்கரைப்பற்றில் 02.08.2012 இரவு முஸ்லிம் காங்கிரஸ் மாவட்ட அலுவலகம் தாக்கப்பட்டுள்ளதுடன், அங்கிருந்த பொறுப்பாளரும் தாக்கப்பட்டுள்ளார். அத்துடன் அம்பாறையில்ஜே.வி.பி. அலுவலகங்கள் சிலவும் தீயிடப்பட்டுமுள்ளன. மேலும் கிழக்கில் நீலப்படையணியினர் என்ற குழவினர் தமிழ், முஸ்லிம் வாக்காளர்களை அரசாங்கத்திற்கு வாக்களிக்குமாறு அச்சுறுத்தி வருவதாகவும் தெரிவிக்கப்படுகிறது. தென்பகுதியிலிருந்து கொண்டு செல்லப்பட்ட இளைஞர், யுவதிகளே நீலப்படையணியினர் எனச செயற்பட்டு வருவதாக ஏனைய கட்சித் தலைவர்கள் குற்றம் சாட்டியுள்ளனர்.

இதேவேளை சம்பாந்துறை, அக்கரைப்பற்று, கல்முனை, பொத்துவில் ஆகிய பொலிஸ் பிரிவுக்குட்பட்ட பகுதிகளில் அதிக வன்முறைகள் பதிவாகியுள்ளன. இதனையடுத்து விசேட பாதுகாப்புத் திட்டமொன்றை முன்னெடுப்பதற்கு பொலிஸார் நடவடிக்கை எடுத்து வருவதாகவுத் தெரிவிக்கப்படுகிறது.

இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தின் கிழக்கு பிராந்திய நிலையம் அரசியல் கட்சியொன்றின் பிரச்சாரப் பீரங்கியாச் செயற்பட்டு வருவது தொடர்பாக தேர்தல் ஆணையாளருக்கு அறிவிக்கப்பட்டுள்ள போதும் பிரச்சாரம் தொடர்வதாகவே தெரிவிக்கப்படுகிறது.

## இந்துக் கோவில்கள் மீது...

தோன்றியுள்ளது.

இதே வேளை தம்புள்ள பாதெனியாவில் அமைந்துள்ள பத்திரகாளியம்மன் கோவிலின் வருடாந்த இரதோற்சவ பவனியை நடாத்துவதற்கும் பொலிஸார் கட்டுப்பாடுகளை விதித்துள்ளனர். கடந்த பல வருடங்களாக நடைபெற்று வரும் இக்கோவிலின் தேர்த்திருவிழாவினை, இரவில் நடாத்தினால் பிரச்சினைகள் ஏற்படும் எனத் தெரிவத்த பொலிஸார் இம்முறை கோவில் வளாகத்தினுள் மட்டும் நடாத்துமாறும் கட்டுப்படுத்தியுள்ளனர். முன்னதாக கடந்த ஞாயிற்றுக்கிழமை (02.09.2012) நடைபெற்ற ஊர்வலத்திற்கும் பொலிஸார் பாதுகாப்பு வழங்க முன்வரவில்லை.

தம்புள்ளயில் ஏற்கனவே முஸ்லிம்களின் வணக்கஸ்தலத்தினை அகற்றக்கோரி பௌத்த பிக்குகள் ஆர்ப்பாட்டம் செய்திருந்த நிலையில், தற்போது இந்துக் கோவிலின் நடவடிக்கைகளிற்கும் தடைகள் ஏற்படுத்தப்படுவது மக்களிடையே அச்ச நிலையைத் தோற்றுவித்துள்ளது.

ஏற்கனவே சிலாபம் முன்னேஸ்வரம் பத்திரகாளியம்மன் அலயத்தில் நடைபெறவிருந்த வருடாந்த வேள்விப்பூசை அரசியல் வாதிகளாலும், பிக்குகளாலும் நெருக்கடிக் குள்ளாக்கப்பட்டிருந்தது. இறுதியில் ஜனாதிபதியின் வேண்டுகோளையடுத்து வேள்விப்பூசை ஆலய பூசகரினால் நிறுத்தப்பட்டது என்பதுவும் குறிப்பிடத்தக்கது.

தாயகத்திலிருந்து விஜே

# 351 அவனா? அவளா?

க.நவம்

தலையங்கமே தலைச் சுற்றை ஏற்படுத்துகிறதா? உங்கள் தொலைபேசி இலக்கத்திலும் சரி, நீங்கள் வாங்கும் ஒரு பொருளின் விலையிலும் சரி, ஆண் எது? பெண் எது? என அடையாளம் காணும் காலம் விரைவில் வரலாம். கலிகாலம்தானே என்று தலையில் அடித்துக் கொள்ளாதீர்கள்! இது அமெரிக்காவில் உள்ள நோர்த் வெஸ்ரேர்ன் பல்கலைக்கழக ஆய்வாளரான ஜேம்ஸ் வில்கி என்பவரது கண்டுபிடிப்பு. என்ன செய்யலாம், நம்பித்தானே ஆகவேண்டியிருக்கிறது!

நாங்கள் இந்த உலகில் காலடி எடுத்து வைத்த நாள் முதலாக, ஆடைகள் முதற்கொண்டு அத்தனை பொருட்களிலும் அவற்றின் நிறங்கள், வடிவங்கள் என்பவற்றின் அடிப்படையில், எது ஆணுக்குரியது? எது பெண்ணுக்குரியது? எனக் கற்பிக்கப்படுகிறோம். பொதுவாக மனிதரிலும், விலங்குகளிலும், ஏன் சில தாவரங்களிலும்கூட, ஆண் - பெண் வேறுபாட்டை இலகுவில் இனங் காணப் பழக்கப்பட்டுவிடுகிறோம். இந்தப் பயிற்சி காரணமாக, எம்மை அறியாமலே, நாம் காணும் அனைத்திலும் ஆண், பெண் பண்புகளைப் பார்க்கத் துவங்கிவிடுகிறோம், ஆதவனை ஆணென்றும், அழ்கடலைப் பெண்ணென்றும் சொல்லுமாப்போல. இதன் தொடர்ச்சியாக, ஒரு இலக்கத்திலும் ஆண்மையா, பெண்மையா ஒழிந்திருக்கிறது எனக் கண்டறியலாம் என்ற தவல் ஒரு புதினம்தானே?

இலக்கம் ஒன்று அதிகாரத்தையும் தன்னுரிமையையும் வலியுறுத்தும் ஓர் இலக்கம் என்பதால், இது ஆண் தன்மை கொண்ட இலக்கமாகக் கருதப்படுகிறது. ஆனால் இலக்கம் இரண்டு நட்பையும், நல்லுறவையும், கூடுதலான சமூக உடாட்டத்தையும், கரிசனையையும் வலியுறுத்தும் ஓர் இலக்கமாகும். இது பெண்மையைப் பிரதிபலிக்கும் இலக்கம் எனக் கூறப்படுகிறது. இப்பண்புகள் முறையே சகல ஒற்றை எண்களுக்கும், இரட்டை எண்களுக்கும் பொருந்தும் என்பது அன்றைய எண்சாஸ்த்திரம் முதற்கொண்டு இன்றைய ஆய்வுகள் வரை கண்ட முடிவு.

பாதுவாகவே, சிந்திப்பதற்கு இலகுவாயிருப்பவை எவையும் அதிக சௌகரியமும், நட்பும் கொண்டவை என்பது அனுபவ வாயிலாகக் கண்ட உண்மை. இது பொதுவாகப் பெண்களுக்கும் பொருந்தும். இதன் உண்மை, பொய் அறிய ஆர்வமாய் இருந்தால், நீங்களே இதைச் செய்து பாருங்கள்.

100 வரை உள்ள இரட்டை இலக்கங்களை இடைவிடாமல் தொடர்ந்து சொல்லிப் பாருங்கள். அது முடிந்ததும் 99 வரையிலான ஒற்றை எண்களை இடைவிடாமல் தொடர்ந்து சொல்லிப் பாருங்கள். இரட்டை எண்களைச் சொல்வதில் பொதுவாகச் சிரமம் இருக்காது. மிக இலகுவாக இரண்டிலிருந்து நூறு வரை சொல்லி முடிப்பீர்கள். ஆனால் ஒன்று முதல் தொண்ணூற்றொன்பது வரையிலான ஒற்றை எண்களைச் சொல்லும்போது இதே இலகு தன்மை எல்லோருக்கும் இருக்காது. உங்களில் அநேகமானோர் நிச்சயம் இடையிடையே சிரமப்படுவீர்கள். இதிலிருந்து இலக்கங்களிலும் பாலின வேறுபாடு உண்டென்பது உறுதியாகின்றதல்லவா?

இனி உங்கள் வீட்டு இலக்கத்தில் ஆண்மை தெரிகிறது என ஆரும் சொன்னால், தயவுசெய்து ஆத்திரப்படாதீர்கள்!